SHIVAJI
TAMIL WEEKLY

# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
30th year
of Publication
14—3—1965

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் | ஆசிரியர்: திருலோகசீதாராம்

# பரீட்சைகள் நடைபெறும்

## எழுதாமலே 'பாஸ்' ஆகும் என்று எண்ண வேண்டாம்

தொடர்ந்து வகுப்புகளுக்குச் செல்லாமலிருந்தால் பரீட்சைகளை நடத்தமாட்டார்கள் என்றும், பரீட்சை எழுதாமலேயே மேல் வகுப்புக்குச் சென்றுவிடலாம் என்றும் மாணவர்கள் நினைத்தால், அது தவருன எண்ணமாகும் என்று முதன் மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் அறிவித்தார். திட்டப்படி பரீட்சைகள் நடக்கும் என்ருர்.

மாணவர்களின் ஆஜர் குறைவாக இருந்தாலும் கல்லூரிகளைத் திறந்து வைத்திருக்கும்படி கல்லூரி அதிகாரிகள் கேட்டுக்கொள்ளப் பட்டிருப்பதாகவும் முதன் மந்திரி தெரிவித்தார்.

வகுப்புகளுக்குச் செல்ல வேண்டாமென்று மாணவர்களுக்கு வேண்டுகோள் விடுப்பது கடும் குற்றம் என்றும் அவர் அசெம்பிளியில் எச்சரித்தார்.

கல்வி இலாகா மான்யக் கோரிக்கை மீது நடந்த விவாதத்திற்குப்பதிலளித்து ஸ்ரீ பக்தவத்சலம் பேசுகையில், கிளர்ச்சியைக் கைவிட்டு, வகுப்புகளுக்கு திரும்பும்படி மாணவர்களை கேட்டுக் கொண்டார்.

வகுப்புகளுக்கு செல்லாமலிருப்பது, மாணவர்களுக்கோ, அல்லது நாட்டிற்கோ நல்லதல்ல என்று கூற விரும்புகிறேன் என்ருர்.

வகுப்புகளுக்குச் செல்ல வேண்டாமென்று மாணவர்களைக் கேட்டுக் கொள்ளும் துண்டு பிரசுரங்களை (நோட்டீஸ்) அச்சடிக்க திருப்பூரில் இரு தி. மு. க. வினர் ஆர்டர் கொடுத்திருப்பதாகவும் சில ஆசிரியர்களும் மாணவர்களுக்கு இது போன்ற வேண்டுகோள் விடுத்திருப்பதாக கூறப்படுகிறதென்றும் இது மாபாதகம் என்றும் முதன் மந்திரி குறிப்பிட்டார்.

அவர் மேலும் கூறியதாவது:- ''சென்னை நகரத்திலுள்ள பிரசிடென்ஸி கல்லூரி, கீழ்ப்பாக்கம் வைத்தியக்கல்லூரி, செங்கல்ராயா தொழில் நுட்ப கழகம் ஆகியவற்றில் மாணவர்கள் யாரும் வகுப்புகளுக்கு வரவில்லை என்றும் தியாகராயா கல்லூரியில் ஒரே ஒரு மாணவரைத் தவிர மற்றவர்கள் எவரும் வரவில்லை என்றும் தகவல் கிடைத்துள்ளது. விவேகானந்தா கல்லூரி, ஆசிரியர் பயிற்சி கல்லூரி மாதருக்கான 5 கல்லூரிகள் ஆகியவற்றில் மாமூலாக ஆஜர் இருக்கிறது.

சர்க்கார் கலைக் கல்லூரி, சட்டக் கல்லூரி, பச்சையப்பன் கல்லூரி, என்ஜனீயரிங் கல்லூரி, ஸ்டான்லி வைத்தியக்கல்லூரி, ஆகியவற்றில் குறைந்த அளவில் மாணவர்கள் வந்திருந்தனர். லயோலாகல்லூரியில் 85 சதவிகிதம், நியூகாலேஜில் 75 சதவிகிதம், அரசாங்க வைத்தியக் கல்லூரியில் 30 சதவிகித மாணவர்கள் வந்திருந்தனர்.

திருச்சி, மதுரை ஆகிய நகரங்களிலும் மாணவர்கள் வகுப்புகளுக்குச் செல்லவில்லை என்று சர்க்காருக்கு தகவல் கிடைத்திருக்கிறது.

ராஜ்யத்தில் சில இடங்களில் மாணவர்கள் பலாத்காரச்செயல்களிலும் தீ வைப்பதிலும் ரயில்களை நிறுத்துவதிலும் ஈடுபட்டு இருப்பதாகவும் சர்க்காருக்குத் தகவல்கள் வந்துள்ளன. திருமங்கலத்தில் சிலர் கைது செய்யப்பட்டிருக்கிருர்கள்.

விவேகமான ஒழுங்கான பாதைகளுக்கு மாணவர்களை மீண்டும் இட்டுச் செல்ல தாம்செய்யும் முயற்சிகளில் தம்முடன் ஒத்துழைக்குமாறு அசெம்பிளியிலுள்ள எல்லா கட்சிகளின் தலைவர்களையும் ஸ்ரீ பக்தவத்சலம் கேட்டுக்கொண்டார்.

முதன் மந்திரிகள் மகாநாட்டில் ஏகமனதாக ஏற்கப்பட்டமும்மொழித்திட்டப்படி, தென்னுட்டினரைப் போல வடநாட்டவரும் 3 மொழிகளைக்கற்றுக்கொள்ள வேண்டும். ஹிந்தி, ஆங்கிலம் ஆகியவற்றுடன் ஒரு நவீன மொழியைக், குறிப்பாக தென்னிந்திய மொழிகளில் ஒன்றையும் கற்றுக் கொள்ளவேண்டும்.

தென்னுட்டு மக்கள் ஹிந்தியை வெறுக்கலாகாது. மாணவர்களின் எதிர்காலத்தையும் நாட்டின் நலனையும் கருத்திற் கொள்ளுமிடத்து ஹிந்தி கற்றுக் கொள்வது நல்லது. ஹிந்தி கற்றுக் கொள்வது கட்டாயமில்லை என்ருலும் மாணவர்கள் அதை கற்றுக் கொள்வார்கள் என்று நான் நம்புகிறேன்.

''தங்களுக்கு எது நல்லது என்பதை பெரும்பான்மையான மாணவர்கள் உணர்ந்திருக்கிருர்கள். அமைதியாக படிப்பை தொடங்க விரும்புகிருர்கள், ஆனுல் துர்ப்போதனை பெற்ற சிலரால் அந்த மாணவர்கள் தடுக்கப்படுகின்றனர்.

வகுப்புகளில் மாணவர்களின் ஆஜர் குறைவாக இருந்தாலும் பள்ளிகளையும் கல்லூரிகளையும் சர்க்கார் தொடர்ந்து திறந்து வைத்திருக்கும். தனியார் கல்வி ஸ்தாபனங்கள் கோரினுல் போலீஸ் உதவி அளிக்கப்படும்.

சொத்துக்களுக்கு நாசம் ஏற்படக் கூடும் என்று பயந்து, திருச்சி மற்றும் இதர ஊர்களில் தனியார் கல்லூரிகள் மூடப்பட்டிருக்கின்றன.

சிரமப்பட்டு தொழில் கல்லூரிகளில் இடம் பெற்றுள்ள மாணவர்கள், இப்படி வகுப்புக்குச் செல்லாமல், தங்கள் எதிர்காலத்தில் அக்கறை காட்டாமலிருப்பதுவருந்தத்தக்கது.

'கல்லூரிகளில் தமிழ் மூலம் பாட போதனை பெற முன் வருபவர்களுக்கு எல்லா சலுகைகளும் தரப்படும். போதிய அளவில் மாணவர்கள் முன்வந்தால், தனித்தமிழ்க் கல்லூரி ஆரம்பிக்கவும் தயார்.

தமிழில் கல்லூரிப் படிப்பு பெறுபவர்களுக்கு சர்க்கார் உத்தியோகங்கள் வழங்கப்படும் என்று திட்டவட்டமான உத்தரவாதம் அளிக்க இயலாது. ஆனுல், உயர் ஆரம்பப்பள்ளிகளில் தமிழில் சரித்திர பாடம் கற்றுக் கொடுக்க 2000 ஆசிரியர்களின் பதவி காலியாக இருக்கிறது என்பதையும் அதற்கு ஆள் கிடைக்கவில்லை என்பதையும்,சுட்டிக்காட்டினுர் முதலமைச்சர்.

* * *

### அண்ணுதுரை

மத்திய ஆட்சிமொழி விவகாரத்தை அரசியல் வாதிகளுக்கும் வயதானவர்களுக்கும் விட்டுவிட்டு உடனே கல்லூரிக்கும், பள்ளிகளுக்கும் மாணவர்கள் திரும்பிச் சென்று படிப்பில் நாட்டம் செலுத்துவது அவசியம் என்று திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் ஸ்ரீ சி. என். அண்ணுதுரை வலியுறுத்தியிருக்கிருர்.

''மாணவர்கள் அரசியலில் தீவிரமாக இறங்கிவிடக் கூடாது. பெற்ருேர்களுக்கும் நாட்டிற்கும் அவர்கள் செய்யக்கூடிய பெருந்தொண்டு உடனே படிப்பில் கவனம் செலுத்தத் துவங்குவதேயாகும்'' என்ருர்.

மேற்குறித்த வேண்டுகோளை ஸ்ரீ அண்ணுதுரை டில்லியிலிருந்துடெலிபோன் மூலமாக சென்னையில் ஸ்ரீ இரா. நெடுஞ்செழியனுக்கு தெரிவித்து செய்தியை வெளியிடச் சொன்னுர். பின்னர் அதை பத்திரிகைகளுக்கு வெளியிட்டார்.

### டாக்டர் சி. பி.

'கல்லூரி மாணவர்கள் மீண்டும வகுப்புகளுக்கு திரும்பிச் சென்று படித்து வரப்போகிற பரீட்சைகளில் தேறவேண்டுமென்ற கருத்துள்ளவர்களும், கிளர்ச்சி நீடித்துக் கொண்டேபோக வேண்டும் என்றும் வகுப்புகள் நடைபெறக் கூடாதென்ற கருத்துள்ளவர்களும் இருப்பது நன்கு தெரிகிறது.

'சென்ற மாதத்தில் கிளர்ச்சியை வாபஸ் பெறுவதாகவும் ஆட்சி மொழி விவகாரத்தை 'பெரியவர்' களிடம் விட்டுவிடுவதாகவும் மாணவர்கள் சார்பில் வெளியிடப்பட்டதாக ஒரு அறிக்கை கூறுகிறது. ஆனுல் 'பெரியவர்களிடம்' எல்லா மாணவர்களும் நம்பிக்கை வைக்கவில்லை என்று இப்போது தோன்றுகிறது. 17வது அரசியல் சட்ட அத்யாயத்தையே ரத்து செய்துவிட வலியுறுத்துகிருர்கள் இப்போது.

'தற்போதைய நிலைமை திருந்த ஒரே வழி என்னவென்ருல் வகுப்புகளுக்கு திரும்பும் மாணவர்களை அவ்வாறு செய்ய அனுமதிப்பதே ஆகும்.

'அண்ணுமலை சர்வகலாசாலையைப் பொறுத்த அளவில் சுமார் 60 சதவிகித மாணவர்கள் மீண்டும் படிப்பை தொடருவதற்கே விருப்பம் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. சிறுபான்மை மாணவர்கள் நேர் எதிரான எண்ணங் கொண்டவராயிருக்கிருர்கள் என்பதும் தெளிவு. வகுப்புகளுக்கு திரும்ப விரும்பாதவர்களை திரும்பிச் சென்று படித்து பரீட்சைகளுக்கு ஆஜராக விரும்பும் மாணவர்களை தடுக்க வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். படிப்பில் அக்கறையுள்ள மாணவர்கள் பயப்படுவதை விட்டு விட்டுத் துணிந்து முன்வர வேண்டும்' என்று டாக்டர் ராமசாமி அய்யர் தமது அறிக்கையில் கூறுகிருர்.

### தி. மு. க. எம். எல். ஏ க்கள்

8வ. பள்ளி, கல்லூரிகள் திறந்தும் சில மாணவர்கள் மேற்கொண்டுள்ள நிலை நியாயமற்றதாக இருக்கிறது. தொடர்ந்து மாணவர்கள் வகுப்புக்குச் செல்லாமலிருப்பது தேச நலனில் அக்கறையுள்ள அனைவரும் கண்டிக்கத்தக்கதாகும் என்று தி மு.க. மெம்பர் ஸ்ரீ கே. ஏ. மதியழகன் தமிழ்நாடு அசெம்பிளியில் கூறினுர். மாணவர்களை வகுப்புகளுக்கு செல்லாமல் வெளியேறும்படி தூண்டுபவர்களை தேசத்துரோகிகளாக கருத வேண்டும் என்ருர்.

மாணவர்கள் தங்கள் எதிர்காலத்தை பாழாக்கிக்கொள்ளாமல், விவேகமாக நடந்து கொண்டு தங்கள் வகுப்புகளுக்குச் சென்று படிக்கும்படி தூண்ட சர்க்கார் மேற்கொள்ளும் நடவடிக்கைகளில் தமது கட்சி ஒத்துழைக்கத்தயாராக இருப்பதாக அன்றைய விவாதத்தில் கலந்துகொண்ட தி. மு. க. எதிர்க் கட்சி தலைவர் ஸ்ரீ நெடுஞ்செழியன் உள்பட தி. மு. க. மெம்பர்கள் அனைவரும் கூறினர்.

தற்போதைய நிலைமை பற்றி ஆராய உயர் கல்வியாளர் உள்பட சர்வகட்சி மகாநாட்டை முதன் மந்திரி கூட்ட வேண்டும் என்றும் மாணவர்கள் பயனற்ற தங்கள் நடத்தையைப்பற்றி உணரும்படிச் செய்ய வேண்டும் என்றும் ஸ்ரீ நெடுஞ்செழியன் கூறினுர்.

மாணவர்களை தவருன வழியில் நடத்திச் செல்பவர்களை தி. மு. க. கண்டிப்பதாகவும் இவ்விதம் செய்பவர்களை சமூக விரோதிகளாகக்கருதி கடும் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று ஸ்ரீ கே. ஏ. மதியழகன் கோரினுர்.

சர்க்கார் மாணவர்கள் மீது உள்ள சகல வழக்குகளையும் வாபஸ் பெற்றபின் சிக்கலான இம்மொழிப் பிரச்னைக்கு தீர்வு காணும் முயற்சியில் பெரியோர்கள் ஈடுபட்டிருக்கும்போது மாணவர்கள் கிளர்ச்சியை நீடிப்பது சரியல்லவென்ருர். கல்வீச்சும், காலித்தனமும் தமிழ் நாட்டுக்கு அவப்பெயரையே வாங்கித்தருமேயல்லாது அதனுல் எதையும் சாதித்து விட முடியதென்ருர்.

—★—

# பேரின்ப வாழ்வு

திரு. இ. வே. சோமசுந்தரம், B.A., P & A (DIP)

இராமகிருஷ்ண விஜயம், மாசிகையிலிருந்து மறுபதிப்பு.

## 3. உண்மை இலட்சியம்

எவ்வொருவருக்கு உண்மையே தமது இயற்கையான உருவில் காட்சியளித்து சான்றுகளாலும், உவமைகளாலும், வர்ணிப்புகளாலும் சொல்லி மயக்கம் செய்யாமல் இருக்கிறதோ அவர் நல்வினைப்பேறு உடையவர்தான். நேருக்கு நேராக எப்பொருளிலும் உண்மை காண்பவனே இன்பம் துய்ப்போன் ஆவான்.

நம்முடைய கருத்துகளும் நம் ஐம்புல உணர்ச்சி நுகர்ச்சிகளும் அடிக்கடி நம்மை ஏமாற்றிவிடுகின்றன. அவைகள் அறிந்து கொள்வது மிகக் கொஞ்சமே.

தெளிவாக விளங்காத நுணுக்கங்களையும் மறைகளையும்பற்றி பெரிய சொற்போர் நிகழ்த்தி என்ன பயன்? அவைகளைப்பற்றி நமக்குத் தெரியாமலிருப்பதற்காக யாரும் தண்டிக்க மாட்டார்கள்.

நமக்கு இன்றியமையாததாகவும் நன்மை தருவனவாயும் உள்ளவைகளைக் கவனியாமலிருப்பது பெரிய மூடத்தனமாகும். அவற்றை விட்டுவிட்டு விசித்திரமானவைகளைப்பற்றியும் கெடுதி விளைவிக்கக்கூடியவைகளைப்பற்றியும் நமது மனத்தை உலப்பிக்கொண்டிருக்கலாமோ? அப்படிச் செய்வதால் கண்ணிருந்தும் பார்க்காதவர்களாவோம்.

ஒவ்வொரு பொருளின் தோற்றத்தையும் இனத்தையும் குணத்தையும் விரிவாகத் தெரிந்துகொண்டே இருப்பதில் என்ன பயன்? எவனொருவனுக்கு அழியாத உண்மை காட்சியளித்து அறிவை ஊட்டுகிறதோ அவன் நலம் பயவாக் கருத்துக்களிலிருந்தும் ஆராய்ச்சிகளைத் திரட்டி மனத்தில் தாங்கிக் கொண்டிருக்க வேண்டிய பெரும் சுமையிலிருந்தும் விடுபடுகிறான்.

அந்த ஒரு உண்மையிலிருந்தே அனைத்தும் உண்டாயின. அந்த ஒன்றையே அனைத்தும் பேசுகின்றன. அதுவே அனைத்திற்கும் ஆதி. நம்மிடம் பேசுவதும் அதுவே.

அந்த ஓரே உண்மையை அறியாதவன் எவனும் எதையும் சரியாக அறிந்து கொள்வதில்லை. எந்தச் செயலையும் சரியாக முடிவு கட்டுவதும் இல்லை.

எவனொருவன் எல்லாவற்றையும் ஒன்றே என்று கருதுகிறானோ, சகலத்தையும் ஒன்றாகக் குறைத்துக் கொள்ளுகிறானோ, அனைத்தையும் ஒன்றிலே காண்கிறானோ அவனுக்கு மனச்சாந்தி உண்டு. அவன் தெய்வத்தினிடம் இன்பப் பேற்றினை அடைகிறான்.

தனி உண்மையாகிய ஓ கடவுளே! அழியாத ஈடுபாட்டில் என்னை உன்னுடன் ஒன்றாக்கிவிடு.

பல பொருள்களைப்பற்றிப் படிப்பதும் கேட்பதும் எனக்கு அடிக்கடி மிகத் தொந்தரவாக இருக்கிறது. உண்மை வடிவான உம்மிடமே நான் தங்க விழைவதும் இருப்பதும் வேண்டுகிறேன்.

பெரிய புலவர்களும், ஞானிகளும் பிற உயிர்களும் வாயை மூடிக்கொண்டிருக்கட்டும். நீர்மட்டும் என்னிடம் பேச வேண்டுகிறேன்.

எவ்வளவு அதிகமாக ஒருவன் தனக்குள்ளே தன் அகச் சான்றில் ஒருமைப்பட்டுச் சாந்தி பெறுகிறானோ, அவ்வளவு அதிகமாகக் கலக்கமற்ற தன்மையையும் தூய்மையையும் அவன் பெறுகிறான். அவ்வளவுக்கவ்வளவு அதிகமான உயர்ந்த கருத்துக்களை எளிமையாக அறிந்து கொள்ளுகிறான். அதற்கு வேண்டிய அறிவுத் தெளிவையும் உள்ளொளியையும் அவன் உள்ளிருந்து பெறுகிறான்.

ஒரு தூய உண்மையான திடமான நல்லுயிர் பல தொழில்களில் ஈடுபட்டிருந்தாலும் அது மனக் குழப்பத்தை அடைவதில்லை. ஏனென்றால் தனக்குள்ளே நிறைந்த சாந்த பேரமைதி நிலையைப் பெற்றிருப்பதால் அந்த உயிர் தான் செய்யும் எதிலும் தற்பெருமையை நாடாமலும் தெய்வத்தின் அருளுக்குச் சான்றாகவும் எல்லாச் செயல்களையும் செய்கிறது.

உனது முயற்சியால் அடக்கி ஆளப்படாத உனது மனத்தினுடைய ஆசாபாசங்களைத் தவிர உன்னை முன்னேறவொட்டாமல் தடுத்து துன்புறுத்துபவர் யார் உளர்!

தெய்வத் தன்மையுடைய ஒரு நல்ல மனிதன் வெளிப்படையாகச் செய்யவேண்டிய காரியங்களைப்பற்றித் தனக்குள்ளேயே முதலில் ஆய்ந்து ஓய்ந்து பார்த்துத் தீர்மானம் செய்து மானசீகமாக அவற்றை முடித்துவிடுகிறான்.

அவைகள் வரம்பு மீறிய ஆசாபாசங்களால் மாற்றப்படுவதில்லை. மற்று அவன் சரியான, உண்மை ஞானத்திற்கு ஏற்ற முறைப்படி அவைகளை நடத்துகிறான்.

தன்னைத்தானே அடக்கி ஆள முயல்பவனைவிட பெரிய போரில் ஈடுபட்டிருப்பவர் உலகில் எவர் உளர்?

தன் வெற்றி, தன்னையே அடக்குதல், இதுதான் நம் ஒவ்வொருவருடைய இன்றியமையாத இடை ஈடில்லாத முயற்சியாக இருக்கவேண்டும். நாளுக்குநாள் உரம் உடையவர்களாகி நாளுக்கு நாள் தூய்மையில், தெய்வீகத் தன்மையில் ஒவ்வொரு படி மேல் வளர்ந்தவர்களாகவேண்டும்.

இந்த உலக வாழ்வில் எப்படிப்பட்ட நிறைவினை அடைந்தாலும் அதிலும் ஏதாவது குற்றம் குறைபாடு இருந்தேதான் தீரும். நம்முடைய ஆராய்ச்சி அறிவுகளில் எதிலும் கொஞ்சமாவது அறியாமையும் குழப்பமும் இல்லாமல் இரா.

மிகவும் அடக்கமாகச் சிறிதளவு தன்னைத் தானே அறிந்திருப்பது, பெரிய புலமையும் ஆராய்ச்சியும் மற்ற காரியங்களில் தேடிக் கொண்டிருப்பதைவிட நிச்சயமாகத் தெய்வத்தினிடமும் சாந்த நிலைக்கும் கொண்டு செல்லும் வழியாகும்.

இதனால் ஆராய்ச்சியையும் கல்வியையும் குற்றம் சொல்லக்கூடாது. எதைப் பற்றிய அறிவும் தெளிவும் கடவுளால் ஏற்படுத்தப்பட்டிருப்பதாலும் அதைப் பொருத்தவரையில் அறிவு நல்லதேயாதலாலும் ஒன்றை அறிந்து இருப்பதை வெறுக்கக்கூடாது.

ஆனால் அத்தகைய அறிவுக்கு மேலாகத் தூய்மையான மனச்சாட்சியும் நல்ல ஒழுக்கமும் நிறைந்த வாழ்க்கையை, எப்போதும் கெடாதபடி காக்க வேண்டும். வெறும் அறிவை விடத் தூய்மையாக வாழ்வதே மேலாகும்.

ஆனால் உலகில் பலர் தூய்மையாக வாழ்வதைவிட காரியங்களை அறிந்து கொள்வதில் அதிக முயற்சி எடுத்துக்கொள்ளுகிறார்கள். அதனால் அவர்கள் அடிக்கடி ஏமாந்துபோகிறார்கள். மற்றும்தங்களுடையமுயற்சிகளுக்கு ஏற்றபடி இல்லாமல் மிகக் குறைந்த அளவே பயன் அடைகிறார்கள். அல்லது ஒன்றுமே இல்லாமலும் போகிறது.

மக்கள் பெரிய காரியங்களைப்பற்றிச் சொற்போர் செய்வதிலும், முடிவுகட்டுவதிலும் செலவழிக்கும் அவ்வளவு ஆராய்ச்சியையும், முயற்சியையும் தங்களிடம் உள்ள குற்றங்களையும், தீய வழக்கங்களையும் வேரோடு களைந்து எறிந்துவிடவும், அவற்றிற்குப் பதிலாக நற்குணங்களையும், தூய வழக்கங்களையும் பழக்கத்திற்குக் கொண்டுவரவும் பயன்படுத்தினால் எவ்வளவு நலமாக இருக்கும். அப்படி இருந்தால் உலகில் எள்ளளவு துன்பமும் தீமையும் இருக்காமல் அகன்றுவிடும். வீண் தூற்றுதல்களும் வெறும் பேச்சுகளும் எவ்வளவு இல்லாமல் போய்விடும். சமயங்களிலும் கோவில் மடம் முதலியவைகளிலும் இவ்வளவு அலட்சியமும் ஒழுக்கக் குறைபாடுகளும் பழக்கத்தில் காணப்படவேமாட்டா.

கடைசிக் காலத்தில் நமக்கு மனச்சாந்தி அளிப்பன, நாம் எவ்வளவு படித்தோம் என்பது அல்ல. என்ன என்ன செய்தோம் என்பதேயாகும். எவ்வளவு அழகாகப் பேசினோம் என்பது அல்ல. எவ்வளவு தூய்மையுடன் வாழ்ந்தோம் என்பது.

உலகில் தம்மைப் பொறுத்தவரையில் பெரிய நூல் அறிஞரால் விஞ்ஞானக் கலைகளில் ஆராய்ச்சிமட்டும் செய்துகொண்டு வாழ்ந்து பெரும் சிறப்பாக இருந்தவர்கள் எங்கே?

அவர்களுடைய நிலபுலங்களையும் உடைமைகளையும் வேறு யாரோ அடைந்து வாழ்கிறார்கள். அவற்றை முதலில் ஆண்டுகொண்டிருந்தவர்களைப்பற்றி இவர்கள் சிறிது சிந்திப்பதும்கூட அரிதே. அவர்கள் உயிரோடு இருந்தபோது ஏதோ கொஞ்சம் பெயர்பெற்றவர்களாக இருந்தனர். இப்போது அவர்களை யாரும் எங்கும் பேசுவதும்கூடக் கிடையாதல்லவா?

ஐயகோ! உலகில் வெறும் கீர்த்தி மட்டும் பெற்றிருப்பது எவ்வளவு விரைவில் மறைந்து விடுகிறது. அந்தோ! அந்தச் சாஸ்திர ஆராய்ச்சியாளர்களுடைய வாழ்க்கை முறை அவர்களுடைய புலமைக்கு ஏற்றபடி இருந்திருக்கக்கூடாதா? அப்படி இருந்திருந்தால் அவர்கள் ஆராய்ச்சியும் கல்வித் திறமையும் நல்ல பயன் பெற்றிருக்குமே!

மனச்சாந்திக்கு ஏற்றபடி நடக்காமல், கடவுள் விருப்பப்படி வாழாமல், வெறும் புலமையைமட்டும் தேடிப் பெற்றவர்கள் எத்தனைபேர் இவ்வுலகில் வீணே மடிகின்றனர். அடக்கமும் பணிவும் கொண்டிருப்பதை விட்டுப் பெரிய கல்விமான்கள் என்ற வீண் நன்மதிப்புக்கு ஆசைப்பட்டதால் தங்களைப்பற்றி பெருமையாக நினைத்துக்கொள்ளும் வீணர்களாகிவிடுகின்றனர்.

எவனொருவன் ஈகைக் குணமுள்ளவனோ அவனே உண்மையில் பெரிய அறிஞன். எவனொருவன் தனக்குக் கிடைக்கக்கூடிய எந்த சிறப்புப் பதவி, பட்டம், புகழ் முதலானவைகளைப் பற்றிச் சிறிதும் பொருட்படுத்தாமல் தன்னிடம் அடக்கம் கொள்ளுகிறானோ அவனே உண்மையில் சான்றோன் ஆவான்.

எவனொருவன் உலகிலுள்ள பொருள்களின்மேல் பற்றில்லாமல் அவைகளை மலத்திற்கு ஒப்பாய்க் கருதி கடவுளையும் மனச் சாந்தியையும் அடைய முயற்சிப்பானோ அவனே உண்மையில் அறிவுடையவனாவான்.

எவனொருவன் தனது ஆசாபாசங்களை விட்டுவிட்டு மனச்சாந்திக்கு ஏற்றதைச் செய்கிறானோ அவனே உண்மையில் கற்றுணர்ந்த அறிஞனும்.

## ரயில்கள் வேகம் துரிதமாகும்

ரயில் பிரயாணிகள் கட்டணத்தையும், சரக்குகள் கட்டணத்தையும் அதிகரிப்பதன் அவசியத்தை குறிப்பிட்டு இதில் சலுகை காட்டுவதற்கில்லை என்று லோக் சபையில் ரயில்வே மந்திரி ஸ்ரீ எஸ். கே. பாட்டீல் ரயில்வே பட்ஜெட் விவாதத்திற்குப் பதிலளிக்கையில் கூறினார்.

ஏப்ரல் முதல் தேதியிலிருந்து பல எக்ஸ்பிரஸ், மெயில் ரயில்களின் ஓடும் நேரம் 20 நிமிடம் முதல் 2 மணிவரை குறையும் என்று கூறினார்.

ஏப்ரல் முதல் பாசஞ்சர் ரயில்களில் டீஸல் எஞ்சின்களை இணைக்கும் உத்தேசமிருப்பதாக தெரிவித்தார். டீஸல் எஞ்சின்கள், மின்விசை எஞ்சின்கள் உபயோகத்தினால் அதிகப் பெட்டிகளை இணைக்க முடியும் என்றும் நெரிசலைக் குறைக்கலாம் என்றும் கூறினார்.

தட்சிண ரயில்வே நிர்வாகத்திற்கும், ஜெனரல் மானேஜரின் சேவைக்கும் மந்திரி பாராட்டுதல் தெரிவித்தபோது எல்லோரும் கரகோஷம் செய்தனர்.

ரயில்வே ஊழியருக்குத் தனி ஊதிய போர்டு அமைக்கவேண்டும் என்ற யோசனையை அவர் நிராகரித்தார். ஏற்கனவே ஊதிய போர்டுகள் மூலம் வசதிபெறும் ஊழியருக்கும் அதிகமாக இவர்களுக்கு வசதிகள் உள்ளன என்று தெரிவித்தார்.

## பெண்கள் 'கணக்கு'!

— 0 —

உத்தமி ஒருத்தி உலகில் இருந்தால்
ஒன்பது பேர்மிகப் 'பட்டி'யடா!
இத்தனை தானிந்தப் பெண்களின் கணக்கு!
இதைநீ மனதில் வைத்திடடா!

அழகைக் காட்டிச் சிரிப்பார் சிலபேர்
அதிலே உன்னை அழுத்திடுவார்!
அழுகை காட்டி ஜெயிப்பார் சிலபேர்
அடிமை ஆக்கி நிமிர்ந்திடுவார்!

உறவு கொண்டால் களிப்பார் துதிப்பார்
உனக்கிணை இல்லை என்றிடுவார்!
பரிவு குறைந்தால் பிரிவில் தள்ளி
பாரில் துடித்திடச் செய்திடுவார்!

ஆசை சுரக்கும் கிணற்றைச் சொல்வேன்
அதுவே பெண்கள் இதயமடா!
பாசந் தன்னில் ஆசை அழிப்பவள்
பண்பில் உண்மைத் தெய்வமடா!

— திருச்சி பாரதன்.

# சந்தேகம் தீர்ந்ததா?

**— சாலை இளந்திரையன்**

நாட்டு மக்களின் அன்புக்கும் நன்மதிப்புக்கும் பாத்திரமான ஒரு தலைவர், அரசியல் காரியங்களில் தவறுகள் செய்தாலும் நாட்டு மக்கள் பொறுப்பார்கள். அப்படி இல்லாத 'அரசியல் புதியவர்கள்', முதலில், சுமுகமானவற்றைச் செய்து நாட்டு மக்களின் அன்பையும் நல்லெண்ணத்தையும் பெறவேண்டும். அதன் பிறகே அவர்கள் சிக்கலான பிரச்னைகளை அணுகவேண்டும்.

அரசியலில் மிக முக்கியமான ஒன்று, மக்கள் அனைவரின் அன்புக்கும் உரிய தலைவன்தான் அவர்கள் சம்பந்தப்பட்ட காரியங்களில் மிகுந்த பொறுப்புணர்ச்சியோடு நடந்துகொள்வான். நமக்குத் தெரிந்த எளிய உதாரணம் நமது நேரு...

இன்று இருக்கும் இந்தியத் தலைவர்களில், நாட்டு மக்கள் அனைவரின் ஒருமித்த நன்மதிப்பைப் போதிய அளவு பெற்றவர் ஒருவரும் இல்லை. அதனாலேயே அவர்கள் தவறு செய்கிறார்கள்; தவறுகளுக்கு மேல் தவறுகளாகச் செய்து கொண்டே போகிறார்கள்.

ஆட்சி மொழி என்னும் தொடர்பு மொழி பற்றிய பிரச்சினை நமது நாட்டில் மிகப் பெரிய சிக்கலாக உள்ளது. 'இளவட்டக்கல்' தூக்கப் பழகுகிறவன், முதலிலேயே, இருப்பதற்குள் பெரிய கல்லைப் போய்த் தூக்க முயன்றதுபோல, நேருவுக்குப் பின் ஆட்சிக்கு வந்த நமது தலைவர்கள் தங்கள் ஆற்றலை உணராததால், எடுத்த எடுப்பிலேயே அந்தப் பிரச்சினையில் போய்க் கை வைத்தார்கள். அது, அவர்களை, விழுந்து அமுக்கிக்கொண்டது. 'கீழே விழுந்தாலும் மேல் மீசையில் மண் ஒட்டவில்லை' என்றவன் மாதிரி, சந்தேகமா? அவநம்பிக்கையா?—எங்கே இருக்கிறது? இல்லவே இல்லையே!' என்றார்கள்; கை கொஞ்சம் அழுங்கியதும், 'ஆமாம், சந்தேகம் இருந்தால் தீர்க்கவேண்டியது அவசியந்தான்' என்றார்கள்; கை நசுங்கியது. கண் பிதுங்கியது; 'ஆமாம், ஆமாம், சந்தேகம் இருக்கிறது; இதோ தீர்த்துவிடுகிறோம்!' என்றார்கள். கொஞ்சம் விட்டுப் பிடித்ததும், வேதாளம் பழையபடியும் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டது. 'இந்தி பேசாத பகுதி மக்கள் சந்தேகப்படும்படி இப்போது ஒன்றும் நடந்துவிடவில்லை, பொதுமக்கள் சந்தேகப்படவும் இல்லை' என்று தாளம் போட ஆரம்பித்துவிட்டார்கள்...

சந்தேகம் ஆட்சி மொழிச் சட்டத்தில் இல்லை. அதுதான், 'இந்தியே இந்த நாட்டின் ஆட்சி மொழி' என்று திட்டவட்டமாக அறிவித்துவிட்டதே! 'இந்தியை எதற்காக ஆட்சி மொழி ஆக்கினீர்கள்?' என்று கேட்கப்படும் கேள்விக்கு ஆட்சியில் இருப்பவர்கள் சொல்லும் பதிலில் இருக்கிறது சந்தேகம்; இந்தி (ஆட்சி மொழி என்ற உரிமையில்) எங்கெங்கே, எப்படி எப்படி உட்காரும் என்பதை விளக்கித் தெளிவுபடுத்தாததிலும் இருக்கிறது சந்தேகம்.

இந்தியை இந்த நாட்டின் ஆட்சி மொழி ஆக்கியதற்குப் பல காரணங்களைச் சொல்லுகிறார்கள். அவற்றுள் முக்கியமான ஒரு காரணமாக, 'மக்களுக்குத் தெரியாத மொழியில் ஆட்சி நடப்பது குடியாட்சித் தத்துவத்துக்கே முரணாகும்; நாட்டு மக்கள் அனைவரும் தெரிந்து புரிந்துகொள்ளும் ஒரு மொழியிலேதான் ஆட்சி நடைபெற வேண்டும்' என்று தெளிவாக ஒரே குரலில் எல்லாரும் சொல்லி வருகிறார்கள். அப்படி என்றால் என்ன?—இந்தியா எங்கணும் உள்ள வாக்குரிமை பெற்ற ஒவ்வொரு குடிமகனுக்கும் இந்தி தெரிந்திருக்க வேண்டும் என்பதுதானே பொருள்? நாளை, தேர்தல் சின்னங்களுக்குப் பக்கத்தில் வேட்பாளர் பெயர் அனைத்தும் இந்தியில் எழுதியிருக்கும் என்றுதானே பொருள்? இன்று மணியார்டர் பாரம் எழுத ஆங்கிலம் தெரிந்தவரிடம் ஓடி ஒடுங்கி நிற்கின்ற இந்த நாட்டுப் புத்திரன், நாளை இதே காரியத்தை இந்தி தெரிந்தவரிடம் செய்ய வேண்டும் எனறுதானே பொருள்? மத்திய அரசாங்க சம்பந்தமாக எந்த ஒரு அறிவிப்போ கடிதமோ வந்தால் அது இந்தியில் இருக்கும் என்றுதானே பொருள்?

'அப்படி இல்லை' என்று காட்டுவதற்கு என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது நமது அராங்கம்? அந்தந்த மாநிலத்தில் எல்லாவற்றிற்கும் அந்தந்த மாநில மொழிகளே பயன்படுத்த இன்றுவரை ஏற்பாடு செய்யவில்லை; அந்த மாநிலத்துக்குள் வரும் மத்திய அரசாங்க அறிவிப்போ கடிதமோ, எதுவும் அந்த மாநில மொழியிலேதான் வரும் என்று மக்களுக்குச் சொல்லவில்லை; மத்திய அரசாங்கத்தோடு எந்த இந்தியனும் தன் தாய்மொழியிலேயே கடிதப் போக்குவரத்துவைத்துக் கொள்ளலாம் என்று மக்களுக்குத் தெளிவுபடுத்தப்படவில்லை.

மக்களின் சந்தேகத்துக்கும் அச்சத்துக்கும் இத்தனை காரணங்கள் இருக்க, 'எங்கே இருக்கிறது சந்தேகம்?' என்று பட்டப்பகல் வெட்டவெளியில் தீவட்டி பிடித்துத் தேடுவதில் என்ன பயன்?

'மத்திய அரசாங்கத்தோடு தொடர்புக்கு மட்டும்தானே இந்தி?' என்கிறார்கள். இந்தத் தொடர்பில் இரண்டு வகை உண்டு: ஒன்று மாநில அரசாங்கங்கள் வைத்துக் கொள்வது; மற்றது இந்தியாவின் எந்தப் பகுதியிலும் உள்ள மக்கள் தனிப்பட்ட முறையில் தொடர்பு கொள்வது. மாநில அரசாங்கம் மட்டும் இந்தியில் தொடர்புவைத்துக் கொள்வதில் பெரிய சிரமம் இல்லை; நாலு மொழிபெயர்ப்பாளர்களை வைத்துக்கொண்டால் வேலை முடிந்தது. ஒரு தமிழன் அல்லது குஜராத்திக்காரனுக்கு மத்திய அரசாங்கத்தில் ஒரு காரியம் ஆகவேண்டும் என்றால், அவன் எந்தமொழியில் தொடர்பு வைத்துக்கொள்வது? இந்தியில்தான் என்றால், ஒவ்வொரு இந்தியனும் கட்டாயம் இந்தி நன்கு தெரிந்திருக்க வேண்டும் என்பதுதானே இதன் சுற்றிவளைத்த பொருள்? இந்தி படிக்கவில்லை என்றால் முன்பு ஆங்கிலம் தெரிந்தவன் தயவுச்குக் காத்துநின்றது போல, இனி, அவன் இந்தி தெரிந்தவன் தயவுக்குக் காத்துநிற்க வேண்டும் என்பதுதானே உண்மை?

'குடியாட்சி, குடியாட்சி' என்றுஏதெதற்கெல்லாமோ கூச்சல் போடுகிறோம்; நாட்டில் நடக்கப் போகிற காரியம் இன்னது, அதன் நடைமுறைகள் இன்னின்னவை அதன் மூலம் உங்களுக்கு உள்ள சௌகரியங்கள் இவை என்று நமக்கு ஓட்டுப் போட்ட மக்கள் அனைவருக்கும் தெரிவிக்க வேண்டாமா? ஆங்கில ஆட்சியை 'ஏகாதிபத்தியம்' என்றும் நமது ஆட்சியை 'ஜனநாயகம்' என்றும் சொல்லுகிறோம்; ஆனால் நடைமுறையில் என்ன வேறுபாடு இருக்கிறது? ஆங்கிலம் படித்துத் தனக்குச் செல்லப்பிள்ளைகளாகப் போகிற ஒரு சிலரை நம்பித்தான் ஆங்கில அரசாங்கம் காரியம் செய்தது; நாமும் இந்தி படித்துவிடப் போகின்ற சில பிள்ளைகளை மட்டுமே, நாட்டின் செல்வத்துக்கும் செல்வாக்குக்கும் செல்லப்பிள்ளைகளாக்க முயன்றால் பழைய ஆட்சிக்கும் நமது ஆட்சிக்கும் என்னதான் வேறுபாடு?

'இந்திய மக்கள் தங்களுக்கென்று தாய்மொழிகள் உடையவர்கள்' என்பதை ஆங்கில அரசாங்கம் என்றைக்குமே ஏற்று மதித்துச் செயல்பட்டதில்லை. நாமும் அதே பாணியில்தான் நாளதுவரை, இந்திக்காரர் அல்லாத இந்தியமக்களைக் கருதி வருகிறோம். சுதந்திரக் குடியாட்சியில் நமது போக்கு அடியோடு மாற வேண்டும். ஆனால் மாறவில்லை. எனவே இந்திக்காரர் அல்லாத இந்திமக்களுக்கு, ஆட்சி மொழியைப் பொறுத்தவரையில், மத்திய அரசின் மீது உள்ள சந்கேம் தீரவில்லை.

நமது வார்த்தைகளில் ஏற்பட்டுள்ள மாறுதல் நமது எண்ணத்திலோ செயல்முறையிலோ நாளதுவரை ஏற்படவே இல்லை. காரணம், நமது இன்றைய இந்தியத் தலைவர்கள் யாரும் நமது இந்தியாவை முழுவதுமாக உணரவில்லை; உணர்ந்து நம்மக்கள் அனைவர் மீதும் ஒரேசீரான அன்பு வைக்கவில்லை. அந்த அன்பு இல்லாததால் உண்மையான தேசீயச் செயல் முறைச்சிந்தனை அவர்கள் உள்ளத்தில் தோன்றவே இல்லை. அதற்கு மொழிப்பிரச்சினை சரியானதோர் உரைகல்.

## சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்க நூற்றாண்டு விழா அறிக்கை!

அறம் நலிந்து மறம் மேலோங்கும்போது நல்ல மக்களைக் காப்பாற்றுவதற்காகவும் பொல்லாத மக்களுக்குப் புத்தி புகட்டி, அறிவுறுத்தி நல்வழியில் செலுத்துவதற்காகவும், இறைவன் அவதாரம் செய்வதாகவும், மகான்கள் அவ்வப்போது தோன்றுவதாகவும் நம் மூதாதையர் நம்பிக்கைக் கொண்டிருக்கின்றனர்.

திருவருட்பிரகாச வள்ளலாரெனும் அருட்திரு இராமலிங்க அடிகளார் ஆண்டவனுடைய அருளாட்சியை கொலை, புலை மலிந்த இந்த அவனியில் நிறுவ அரும்பாடு பட்டவர். சாதி, சமய, சழக்குகளை அறவே நீக்கிச் சமரச சன்மார்க்கத்தை நிலைநாட்டியவர் ஜீவகாருண்யத்தையும் சன்மார்க்கத்தையும் இரு பெருங் கொள்கைகளாகக் கொண்டு "சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்" என்ற ஒரு சிறந்த அமைப்பை 1865-ம் ஆண்டில் நிறுவி, உலக மக்களுக்கு தாம் சொல்ல வந்த நல்ல செய்திகளை அருட்பாக்களாக திருவாய் மலர்ந்து அருளியிருப்பதை அனைவரும் அறிவர். பஞ்சம், பட்டினி, பதுக்கல், கள்ளச்சந்தை, கொள்ளை, லாபம், லஞ்ச வாணிபம், ஊழல் முதலிய கொடுமைகள் மலிந்துள்ள இச்சமயத்தில் வள்ளல் பெருமானின் அருட் கொள்கைகள் பரவுவது எவ்வளவு அவசியமானது என்று சொல்ல வேண்டியதில்லை. அதற்கு ஒரு நல்ல வாய்ப்பு நமக்கு இப்போது கிடைத்திருக்கிறது.

இராமலிங்க வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கத்தைத் தொடங்கி இந்த ஆண்டுடன் நூறாண்டு நிறைவு பெறுகிறது. இந்நூற்றாண்டு விழாவை நல்ல பல திட்டங்களுடன் சிறப்பாகக் கொண்டாட வேண்டியது நாட்டு நலம், மக்கள் நலம் நாடும் ஒவ்வொருவருடைய கடமையும் ஆகும். இந்நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் முறையில் வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்க சங்கக் கொள்கைகளுக்குப் புத்துயிர் தந்து மக்களிடையே பரப்பி நல்ல சூழ்நிலையை உண்டாக்கலாம் என்று நாங்கள் நம்புகிறோம்.

சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்க நூற்றாண்டு விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடு செய்து வருகிறோம். வருகிற ஜூன் மாதம் 11, 12, 13 ஆகிய நாட்களில் சென்னை மாநகரில் மிகப் பெரிய அளவில் விழா கொண்டாடப்படும். இவ்விழாவில் நம் தமிழகப் பேரறிஞர்களேயன்றி, இந்தியாவின் பிறப் பகுதிகளிலுள்ள பேரறிஞர்களும், வெளிநாட்டுப் பேரறிஞர்களும் கலந்து கொண்டு வள்ளலாரின் அருட் கொள்கைகளைப் பற்றி சொற்பொழிவாற்றுவார்கள்.

இவ் விழாவை யொட்டி பல நாட்டுப் பேரறிஞர்கள், தத்துவ ஞானிகள் வள்ளலாரைப் பற்றியும் அவருடைய கொள்கைகளைப் பற்றியும் சிறந்த கட்டுரைகள், படங்கள் கொண்ட விழாச் சிறப்பு மலர் ஒன்று 500 பக்க அளவில் வெளியிடப்படும். இதுவன்றி விழா நடக்கும் நாட்களில் ஏழை மக்களுக்கு உணவு வழங்கப்படும். வள்ளலார் அருட்பா சம்பந்தமான கண்காட்சி ஒன்றும் அமைக்கப்படும்.

எனவே, அன்பர்கள் இந் நூற்றாண்டு விழா சிறப்பாக நடைபெறுவதற்குத் தங்கள் தங்களால் இயன்ற எல்லா உதவிகளையும் புரிந்து, ஆலோசனைகளைவழங்கி, உடனிருந்து இந் நன்முயற்சிக்கு ஆதரவு காட்ட வேண்டுமென்று வேண்டி கேட்டுக் கொள்ளுகிறேன்.

இது சம்பந்தமாக தொடர்பு கொள்ள விரும்புகின்றவர்கள் பொதுச் செயலாளர், சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்க நூற்றாண்டு விழாக் குழு, 6, நரசிங்கபுரம் தெரு, சென்னை — 2; என்ற முகவரிக்கு எழுதுக அல்லது வருக.

*— நாரண துரைக்கண்ணன்*

## கருணையின் கதவுகள்

— 0 —

வாயுக்குக் கதவுகள் இதழ்களடா; — நல்
வாழ்வுக்குக் கதவுகள் அறங்களடா!
தாயுக்குக் கதவுகள் மக்களடா; உலகின்
தாழ்வுக்குக் கதவுகள் அற்பரடா!

கண்ணுக்குக் கதவுகள் இமைகளடா;
— உயிர்க்
காதலின் கதவுகள் அன்பெனடா!
செங்கோற்குக் கதவுகள் அமைதியடா;
— நாட்டின்
சீருக்குக் கதவுநன் நூல்களடா!

நீதிக்குக் கதவுகள் சட்டமடா; — நல்ல
நிலைமைக்குக் கதவுகள் இன்பமடா!
சாதிக்குக் கதவுகள் கர்வமடா; — அன்பின்
தழைப்புக்குக் கதவுகள் சகித்தலடா!

மடமைக்குக் கதவுகள் அச்சமடா; – பெரும்
மகிழ்வுக்குக் கதவுகள் எளிமையடா!
திடனுக்குக் கதவுகள் ஒழுக்கமடா; – மலர்ச்
சிரிப்புக்குக் கதவுகள் உண்மையடா!

உலகத்துக் கதவுகள் எத்தனையோ? — நாம்
தட்டிடும் கதவுகள் எத்தகைத்தோ?
கலகத்தை ஓட்டிடல் வேண்டுமடா!
— கதவுகள்
கருணையைக் காட்டிடல் வேண்டுமடா!

*— மனசை ப. கீரன்*




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

மலர் 30 | 14—3—1965 | வாரம் 16

# மறுபடியும்

மீண்டும் மாணவர்கள் போராட்டம் நடத்துகிறார்கள். இதைக்கண்டு அரசாங்கமும் அரசியல் கட்சித் தலைவர்களும் திகைத்துப்போயுள்ளனர். கல்லூரிகள் காலவரையறையில்லாமல் மீண்டும் மூடப்பட்டிருக்கின்றன. உயர்நிலைப் பள்ளிகளும் வேலை செய்ய முடியவில்லை.

சென்ற தடவை மாணவர்களின் போராட்டத்தைப் பரிவுணர்ச்சியுடன் எண்ணிப்பார்த்து வழக்குகள் அனைத்தையும் அரசாங்கம் மீட்டுக் கொண்டிருக்கிறது. வன்செயல்களையும் மறந்து விட்டு மாணவர்கள் மீண்டும் கல்வி பயில வகை செய்ய வேண்டுமென்ற நல்லுணர்ச்சியினால் பல்கலைக் கழகத் துணை வேந்தர்களும் அரசியல் தலைவர்களும் ஆட்சித் தலைவர்களும் சிந்தித்துச் செய்த ஏற்பாடு. இதையும் பொருட்படுத்தாமல் மீண்டும் கல்விச் சாலைகள் மூடப்பட வேண்டிய நிலை வந்தது கவலைக்குரியதாகும்.

பரீட்சைகள் எப்படியும் நடை பெறும் என்று அரசாங்கம் அறிவித்திருக்கிறது. மாணவர்களுக்கு நல்வழி காட்டி அவர்களை ஒருமுகப்படுத்துகின்ற சக்தி எதுவென்றே புரியவில்லை. இந்த நிலை நாட்டுக்கோ மாணவர் சமுதாயத்துக்கோ சிறிதும் பயன் தராது. அவர்கள் விரும்பும் பொது மொழி பற்றிய தீர்வும் இம்முறையில் உண்டாக வழியில்லை. போராட்டத்துக்குக் காரணமான பொது மொழிப் பிரச்னையில் அரசாங்கம் உடனடியாக எந்த முடிவுக்கும் வராமல் விஷயத்தைக் காலங்கடத்தினால் மாணவர்கள் எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்? பிரச்னையைத் திசை மாற்றி விட்டுத் தந்திரமாகக் காலங்கடத்தினால் விவகாரம் தீர்ந்து விடுமா என்று கேட்பவர்கள் இருக்கிறார்கள். எப்படியிருந்தாலும் இனிமேல் மாணவர்கள் இந்தப் பிரச்னையில் நடவடிக்கைகளைத் தாங்களே மேற்கொள்ளுவது ஜனநாயகமுமில்லை, சரியுமில்லை.

நடைபெறுகின்ற கிளர்ச்சிகளுக்கெல்லாம் கிளர்ச்சிக்காரர்களுக்குத் திருப்தி ஏற்படுகின்ற அளவில் உடனுக்குடன் பரிகாரம் செய்தாகவேண்டுமென்றால் எந்த அரசாங்கத்தாலும் அது முடியாத காரியம். எல்லாக் கட்சியிலுமுள்ள தலைவர்கள் இதுபற்றிக் கவலையும் கவனமும் செலுத்தத் தொடங்கிவிட்ட உண்மை தெளிவாக இருந்தும் நடவடிக்கைகளை நிறுத்தாமல் தொடர்வது எவ்வகையிலும் பொருத்தமில்லை.

பெரும்பாலான மாணவர்களும் பெற்றோரும் கல்வியில் அக்கறைகொண்டுள்ளனர் என்பதும் ஒரு சிலர் பிடிவாதமாகப் போராட்டம் நடத்தும்போது சிக்கல் அதிகமாகிறதென்பதும்தான் உண்மையான நிலை. பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டிருக்கவேண்டுமென்றும் விருப்பமுடைய மாணவர்கள் பள்ளிக்கு வரலாமென்றும் அரசாங்கம் அறிவித்திருக்கிறது.

பரீட்சை எழுதாமல் பாஸ் கிடைத்துவிடக்கூடும் என்ற நம்பிக்கையுடன்தான் மாணவர்கள் தொடர்ந்து குழப்பத்தை நீட்டிக்கொண்டிருக்கிறார்களோ என்ற ஐயப்பாடும் உண்டாகி, அதற்கெல்லாம் வழியில்லை என்று அரசாங்கம் தெளிவாகக் கூறியிருக்கிறது.

அரசியல் தலைவர்களும் அறிஞர்களும் மாணவர்களுக்கு விளக்கங்களும், கோரிக்கைகளும், அறிவிப்புகளும் விரிவாக விடுத்துவருகின்றனர்.

மாணவர்கள் சிந்திக்கவேண்டும். அதைக்காட்டிலும் பெற்றோர்கள் நன்கு சிந்திக்கவேண்டும். பொதுமொழிப் பிரச்னை நாட்டின் பெரிய அரசியல் பிரச்னை. அதைத் தீர்க்க அமைதியான சட்டபூர்வமான வழிகள் பற்பல உண்டு. அவற்றைப் பயன்படுத்துவதுதான் உண்மையான ஜனநாயகம். அதை விடுத்துப் பிடிவாதம் காட்ட முயல்வது அராஜகம். இதனால் நன்மை எதுவும் விளையாது.

# கண்ணோட்டம்

— ரா. நா.

கேரள தேர்தல் ஏமாற்றத்தை அளித்து விட்டது என்று கூறினால் அது பாதி உண்மைதான். தேர்தலுக்கு முன்னர் பத்திரிகைகள் 'காங்கிரஸுக்கு வெற்றி வாய்ப்பு அதிகமிருக்கிறது' என எழுதிய விமர்சனங்களை நம்பினவர்கள் மட்டும்தான் ஏமாற்றமடைந்திருப்பர்.

ஆனால் எழுத்தறிவு நிரம்ப இருக்கும் இடங்களில் நிலையான ஆட்சி நடப்பது சாத்யமில்லை என்பதை அறிந்தவர்கள் காங்கிரசுக்கு பெரும்பான்மை பலம் கிடைக்கும் என்பதை எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். பிரான்ஸ் தேச வரலாற்றை அறிந்தவர்களுக்கு இந்த உண்மை நன்கு விளங்கும். ஜனநாயக நாடுகளில் பிரான்ஸைப்போல் தினத்திற்கு ஒரு மந்திரி சபை ஆண்ட நாடே கிடையாது. அந்நாட்டில் எந்தக் கட்சியும் தனது சுய பலத்தைக் கொண்டு ஆட்சி புரிந்ததில்லை.

அதேபோல் தான் மலையாளநாடும். அங்கே ஜனாதிபதி ஆட்சியே சர்வ சகஜமாகி விட்டது. இந்தத் தேர்தலில் ஒரு வாக்காளர் தனது வாக்குச் சீட்டில் "பி. எஸ். ராவே ஆட்சி புரியட்டும்" என எழுதியிருந்தாராம். இந்த திரு. ராவ் முன்னர் ஜனாதிபதி ஆட்சியின்போது பிரதம அதிகாரியாயிருந்தவர். மற்றொரு வாக்காளர் 'மீண்டும் முடியாட்சியேவரட்டும்' என தனது வாக்குச்சீட்டில் எழுதியிருந்தாராம். இதிலிருந்து ஜனநாயக ஆட்சியே மலையாள நாட்டினருக்கு சலித்து விட்டது என்று தோன்றுகிறது.

நிற்க புள்ளிவிவரங்களிலிருந்து, ஓட்டுப் போட்டவர்களில் 32 சதத்தினர் காங்கிரசுக்குத் தான் ஓட்டளித்துள்ளனர் என்று தெரிகிறது அதற்கு அடுத்தபடியாகத்தான் இடது சாரி கம்யூனிஸ்டுகள் பொதுஜன ஆதரவு பெற்றுள்ளனர். வாக்காளர்களில் பெருமளவு காங்கிரஸை ஆதரித்திருந்தும் ஏன் காங்கிரஸ் வெற்றி பெறவில்லை எனில் ஒவ்வொரு தொகுதியிலும் பலபேர் போட்டிபோட்டு ஓட்டுகள் சிதறி விட்டது தான்.

இடது சாரி கம்யூனிஸ்டுகள் அதிகப்படியான ஸ்தானங்கள் பெறக் காரணமென்ன? அவர்களில் பலரை அரசாங்கம் கைது செய்து காவலில் வைத்ததனால் மக்கள் தங்கள் அனுதாபத்தைக் காட்டுவதற்காக அவர்களுக்கு ஓட்டளித்தனர் என்று கூறப்படுகிறது. இது அவ்வளவு சரியான காரணமல்ல. கேரளம் அரிசிப் பற்றாக்குறை நாடு. சமீபத்தில் மக்கள் அரிசி கிடைக்காமல் அல்லல் பட்டனர். கம்யூனிஸ்டுகள் ஆட்சி புரிந்தால் பாலும், தேனும் ஆறாக ஓடும் என நம்பி மக்கள் அவர்களுக்கு ஓட்டுச் செய்திருக்கலாம்.

இவர்கள் தங்கள் சுய பலத்தில் ஆட்சிப் பொறுப்பை ஏற்க முடியாது. எப்படியாவது காங்கிரஸ் ஆட்சி பீடம் ஏறலாகாது என்று எண்ணும் பிற கட்சிகளின் ஆதரவு பெற்றுத்தான் ஆட்சிபுரிய முடியும். அப்படியும் கம்யூனிஸ்ட் காவல் கைதிகள் விடுதலை செய்யப்பட்டால்தான் அவர்கள் அதிகாரத்தை ஏற்று நிர்வகிக்கலாம். ஆனால் அவர்கள் சீனர்களின் அடிபணிபவர்களாயிருக்கும் வரையில் அவர்களை அரசாங்கம் விடுதலை செய்ய முடியாது, செய்யவும் கூடாது. ஆகையால் 'ஹிந்து' பத்திரிகை எழுதியுள்ளது போல் கேரளத்தில் ஜனாதிபதி ஆட்சியைத் தவிர்க்க முடியாது.

காங்கிரஸ் ஸ்தாபனத்தின் நிலைபற்றியும் சற்று கவனிக்க வேண்டும். கேரள காங்கிரசுக்குப் பாடம் கற்பிக்க வேண்டுமென காங்கிரஸ் கட்சியிலிருந்து சிலர் விலகி தனிக் கட்சியாக நின்று போட்டியிட்டனர். ஆனால் அவர்கள் கண்ட பலன் இடது சாரி கம்யூனிஸ்டுகள் பலம் பெற்றதுதான். இந்தப் பிளவு ஏற்படாமலிருந்தால் காங்கிரஸ் வெற்றி பெற்றிருக்கக் கூடும்.

மேலும், சர்க்கார் மந்திரி சபை மீது பல்வேறு புகார்கள் கூறப்பட்டன. அவைகளை நம்பியவர்கள் மீண்டும் அதே ஆட்சி வந்துவிடப் போகிறதே என அஞ்சி காங்கிரசுக்கு எதிராக ஓட்டுச் செய்திருக்கலாம். இதையெல்லாம் மனத்திற் கொண்டு கேரளத்தில் காங்கிரஸ் ஸ்தாபனத்தை தூய்மைப் படுத்தி பலப்படுத்த காங்கிரஸ் மேலிடம் தீவிரமாக முயற்சிக்க வேண்டும். மற்ற சமயங்களில் தூங்கி விட்டு தேர்தல் சமயத்தில் மட்டும் விழித்துக்கொள்வது பெருந்தவறு என்பதுதான் கேரள தேர்தலின் படிப்பினை.

ஃ ஃ ஃ

ஒரிஸா மாஜி முதலமைச்சர்கள் திருவாளர்கள் பிஜி பட்னாயக், பிரேன் மித்ரா இருவரும் அரசாங்க அலுவல்களில் முறை தவறி நடந்து கொண்டனர் என மத்திய அமைச்சரவை துணைக் கமிட்டி தீர்ப்புக் கூறி விட்டது. ரகஸ்ய போலீஸ் விசாரணை முடிவு இவ்விருவரும் அரசாங்க அதிகாரத்தைச் சுயநலனுக்காகப் பயன்படுத்திக் கொண்டனர் என்பதற்கு பல்வேறு உதாரணங்கள் கூறியுள்ளது. 'ஒரிஸா ஏஜெண்ட்ஸ்' என்ற நிறுவனம் திருமதி பிரேன்மித்ராவின் சொந்த ஸ்தாபனம். பட்நாயக்கும், மித்ராவும் அரசாங்கத்திற்குத் தேவையான பல சாமான்களை டெண்டர்கள் கோராமல் இந்த ஸ்தாபனத்தின் மூலம் அது குறிப்பிட்ட விலைக்கே வாங்கியுள்ளனர். இதனால் மாஜி முதலமைச்சரின் மனைவி ஏராளமாக லாபம் சம்பாதித்து விட்டார் என்பது உண்மை.

ஆனால், திரு. பிரேன் மித்ரா எவ்வித லாபமும் அடையவில்லை என்று கூறுவது நியாயமாகத் தோன்றவில்லை. இவ்விருவரும் தங்கள் பதவிகளை ராஜிநாமாச் செய்து விட்டதனால் அதுவே போதிய தண்டனையாகும் என்று மத்திய அமைச்சரவை துணைக் கமிட்டி கூறுவது நியாயமல்ல. பொறுப்பிலுள்ளவர்கள் குற்றம் செய்தால் சாதாரண மனிதர்கள் குற்றவாளிகளானால் அளிக்க வேண்டியதைப்போல் பன்மடங்கு கடும் தண்டனை இவர்களுக்கு அளிக்கப்பட வேண்டும்.

இது ஒருபுறமிருக்க இவர்கள் சம்பந்தமான அறிக்கை ரகஸ்யம் என அரசாங்கம் கருதுகையில் அறிக்கையின் அச்சுப்பிரதிகள் பிரதி ஒன்று 5 ரூபாய்க்குக் கிடைக்கிறது. அதை எதிர்க்கட்சி உறுப்பினர்கள் சபையின் முன் சமர்ப்பித்தனர் என்றால் அரசாங்க அதிகாரிகள் ரகஸ்யங்களை விற்றுப் பிழைக்கிறார்கள் என்பது வெட்ட வெளிச்சமாகிறது. இந்த நிலை மத்ய ஆட்சியின் கண்ணியத்தை உயர்த்தவே உயர்த்தாது.



வலங்கிமான் டி. மு. கோ.
S. C. 835/64.

கோவிந்தராஜு படையாச்சி — வாதி
கிருஷ்ணமூர்த்தி படையாச்சி — பிரதிவாதி

ஷை நம்பரில் வாதியால் பிருமிசரி நோட்டுப்படி ரூ. 354/- கிடைக்க பிரதிவாதி பேரில் தாவா செய்யப்பட்டிருப்பதில் கோர்ட்டார் அவர்கள் உத்திரவுபடி ஒட்டி சர்வு செய்தும், பேப்பர் பப்ளிகேஷனுக்கு 18—3—65ல் ஈரங்கி. அன்று பகல் 11 மணிக்கு கோர்ட்டில் பிரதிவாதி கக்ஷியைத் தெரிவிக்காவிடில் experte-ஆக தீர்ப்பாகிவிடும்.

R. ஸ்ரீநிவாசாச்சாரி
2/6521/139. அட்வகேட்.

## தீராத பிரச்னைகள்

# திருமணமா! திருட்டு வியாபாரமா?

—பரதேசி

நம் நாடு சுதந்தரமடைந்து முன்னேற்றப் பாதையில் பல திட்டங்களைக் கடந்து சென்று கொண்டிருக்கிறது. மக்களின் நல்வாழ்வுக்காக எத்தனையோ சட்டத்திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. ஆனால் பிரச்னைகள் தீரவில்லை.

சமூகத்தில் ஒரு பகுதியார் இழிவான முறையில் ஒழுக்கங்கெட்டு வாழ்வதை ஒரு தடைச் சட்டத்தின் மூலம் அமலிலிருந்து தடுக்க முனைந்தோம்—விளைவு—பரவலாக அந்தக் குற்றவாளிகளைத் தேடிப்பிடித்துக் கொண்டிருக்கிறோம்.

மது போன்ற போதைப் பொருள்களை அருந்தி அதன் காரணமாக வாழ்க்கைத் தரம் கெடவும் சமூகநலன் பாதிக்கப்படவும் கூடாதென்று அதைத் தடை செய்து சட்டம் கொண்டு வந்தோம்—விளைவாக இன்னும் இத்தகைய வழியில் படுமோசமான 'நரக' பானங்களை அதிகவிலையில் விற்கிறவர்களும் வாங்கிப் பருகுகிறவர்களைக் கண்டுபிடிக்கும் வேலையும் பெருகி விட்டது.

வாழ் நாள் முழுதும் ஆணும் பெண்ணும் இன்புற்று வாழத் தடையாக இருக்கும் வரதட்சிணைக் கொடுமையை ஒழிக்கச் சட்டம் கொண்டுவந்தோம்—விளைவு—பயங்கரமாக இருக்கிறது. அப்படியொரு சட்டமிருப்பதாகவே யார் அனுபவத்திலும் தெரியவில்லை—ஹோட்டலில் உணவுப் பொருள்களைப் பரிமாறவும் உரத்த குரலில் 'ஆள் ரெண்டு—ஒன்றரை ரூபாய்' என்று கத்தவும் வாய்ப்புள்ள உத்தியோகம் பார்க்கும் 'மாப்பிள்ளைப் பையன்' சார்பிலும் வாய்கூசாமல் 'மூவாயிரம் தருவார்களா?' என்று கேட்கும் நிலைக்குச் சமூகம் வளர்ந்திருக்கிறது.

திருமணம் ஒருகாலத்தில் ஒழுங்காகக் குடும்பம் நடத்தி மக்களைப் பெற்று முன்னோருக்கு ஈமக்கடன்கள் செய்யவும் வாழ்ந்து வரும் பெரியோர்களுக்குப் பணிவிடை செய்யவும் நாடிவரும் அதிதிகளுக்கு விருந்தளிக்கவும் இறைவன் தந்த நல்வாழ்வைச் சுவைத்து மக்களைப் பெற்று இன்புறவும் சாதனமாக இருந்து வந்தது உண்மைதான்—இன்று அதன் உயர் நோக்கமெல்லாம் இருந்த இடம் தெரியவில்லை.

கல்வித்திட்டத்தில் நல்லொழுக்க போதனைக்குள்ள வாய்ப்பு எப்படிப் பெரும்பாலும் அடியோடு கைவிடப் பட்டுள்ளதோ அப்படியே திருமணத்தில் சமுதாயநல நோக்கம் புறக்கணிக்கப் பட்டு விட்டது. குறிப்பாக குடிசைகளிலோ நடை பாதையிலோ வசிக்க முடியாமலும்,—குளிர்பதன அறைகளிலோ—'க்யூடெக்ஸ்' மாடல்கள் வீடுகளிலோ, (அப்படி ஒன்று இருக்க வேண்டிய அவசியமில்லை தான்—ஏதோ ஒரு மாடல்) தொலை தூரப்பிரயாண விமான வழிகளிலோ பறக்க முடியாமலும், மனித உருவில் 'இரண்டுங்கெட்டான்' பொருளாதாரப் பரிதவிப்பில் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும் மத்யதரக் குடும்பங்களில் தான் திருமணம் 'மூட்டைப்பூச்சி' மருந்துபோல் மனித உயிரைக்குடிக்கும் பிரச்னையாக இருந்து வருகிறது.

ஜாதி–மத–பேதங்களை நடைமுறைத் தேர்தல் அனுபவங்கள் வளர்த்து உறுதியாக்கி வரும் சூழ்நிலையில் அந்தந்த ஜாதிக்காரர்கள் அதே ஜாதியில் பெண்களையோ பிள்ளைகளையோ தேடி அலைவதில் தவறில்லை. ஆனால் வரதட்சிணைப் பிரச்னையாலும், அளவுக்கு மீறிய – பிள்ளையைப் பெற்ற 'மகராசி' களின் சீர்வரிசைப் பேராசை விளைவாலும் உரிய காலத்தில் தங்கள் பெண்களுக்குத் திருமணம் செய்து வைக்க முடியாமலிருக்கும் பெற்றோர்கள்–தொடர்ந்து தங்கள் ஜாதியிலேயே பிள்ளைகளைத் தேடிக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை.

ஒன்று பெண்களைப்படிக்க வைத்து உத்தியோகத்துக்கு அனுப்ப வேண்டும். அப்படிச் செய்வதன் மூலம் தமிழ் நாட்டின் இன்றையச் சிறுகதை இலக்கியம் காட்டும் வழியில் அந்தப் பெண்களே யாரையாவது காதலித்து அல்லது யாராலாவது காதலிக்கப்பட்டு வரதட்சிணைப் பிரச்னையின்றியே திருமணம் நிறைபெற்று விடலாம் — பெற்றோர்கள் தடையாக இல்லாவிட்டால். ஆனால் இந்தச் சூழ்நிலையிலும் நம் வாலிப சகோதரர்கள் சினிமா, டிராமாக்களில் கதாநாயகிகளைக் கண்டு களிக்கும் வெறும் 'ரசிக' மகாஜனங்களாக இருந்து விட்டுத் திருமணம் எனும் நிலையில் நழுவி விடும் 'பேடிக்' கதைகளையும் கேட்கத்தான் செய்கிறோம்.

உத்யோகத்துக்கு அனுப்பியும் என் பெண் யாரையும் காதலிக்க வில்லையே, யாராலும் காதலிக்கப்பட்டு இயற்கையான திருமணச் சூழ்நிலை உருவாக இல்லையே என்று ஏங்குகிறவர்களுக்கு என்னிடம் பதில் வெறும் அனுதாபம் தான்!

இல்லை; இந்த நாட்டில் எப்போதோ ராமன் காலத்தில் அமலிலிருந்த 'ஏகபத்னி' விரதச்சட்டத்தையாவது ரத்துசெய்து தொலைக்க வேண்டும். கையாலாகாத வாலிபர்கள் வாழ்க்கைத்துறையில்—'வரதட்சிணைப்' பிரச்னையை ஒதுக்கிவிட்டு இறங்க முன் வராத போது முன்பே திருமணமாகியும் இன்னும் பல பெண்களை மணந்து கொண்டு அவர்கள் நல்வாழ்வுக்கும் வகைசெய்ய 'வசதி' படைத்திருக்கும் 'கிழக்—காதலர்' களாவது சட்ட சம்மதமாக இந்தத்திருமணப்பிரச்னையைத்தீர்க்க முன்வரலாமல்லவா?

திருமணநோக்கம் வெறும் இனவிருத்திதான் என்று எண்ணுமளவில் இன்று சமூகம் சீர்கெட்டுவிட்டது எனவே குடும்பக்கட்டுப்பாடு திட்டம் வெகுதீவிரமாக அமல் செய்யப்படும் இன்றையச் சூழ்நிலையில் வாலிபர்களும்—யுவதிகளும் குடும்பக்கட்டுப்பாடு திட்டப் பிரசாரகர்களாக இடம்பெற்றுப் பிறருக்கு எடுத்துச் சொல்லாவிட்டாலும் தங்களளவில் அதைக் கற்று நாளடைவில் 'விவாகம்' எதற்கு என்று எண்ணும் நிலையில் தொடர்ந்து காலந்தள்ளி விடும் நெறிகெட்ட வாழ்க்கை முறையும் இன்று சட்டத்திட்டங்களின் எதிர் விளைவாக இருந்து வருகிறது!

சமூக நலனிலும்–நம் இன்றைய வாலிப—யுவதிகளின் நல்லொழுக்கத்திலும் அக்கறையுள்ளவர்கள் 'வரதட்சிணை' முறையால் திருமணமாகாமல் அவதிப்படும் ஏழைப்பெண்களையும்–பெற்றோர்களின் பேராசைப் பிணைப்பால் என்றென்றும் தெருப்பெண்களைப் பார்த்துப் பெருமூச்சுவிடும் நிலையில் ஏங்கும் வாலிபர்களையும் —அவர்கள் எந்த ஜாதியைச் சேர்ந்தவர்களாயினும் சரி—இணைத்து நல்ல முறையில் வாழ வழி காட்ட முனையவேண்டும்.

கடைசிபட்சமாக இப்படி ஏதாவது செய்தால் இந்தப் பிரச்னை தீருமென்று நினைக்கிறேன்.

1. பெண்களுக்குத் திருமணமாகாமல் இருக்க வயதில் உச்ச வரம்பு ஏற்படுத்த வேண்டும்.

2. திருமணம் செய்து கொள்ளாத வாலிபர்களைச் சர்க்கார் எச்சரித்துச் சுற்றறிக்கை விடவேண்டும்—அத்தகையவர்களுக்கு மாநில மத்திய சர்க்கார் வேலை தரக் கூடாது.

3. திருமணமே செய்து கொள்ளாமல் வாழ்நாள் முழுதும் சமூகப் பணிபுரிய விரும்புகிறவர்களை அனுமதித்து அவரவர் மத-ஜாதி-அடிப்படையில் காவி உடை அணிந்தோ அல்லது வேறு சின்னமணிந்தோ 'துறவி' எனும் நிலை வெளியில் தெரியும்படி உலவ விட வேண்டும்.

4. திருமணமாகாத பெண்களுக்குத் தொடர்ந்து உத்தியோகம் தரும் திட்டத்தைக் கைவிட வேண்டும்.

5. குறிப்பிட்ட வயதுக்கு மேல் தங்கள் பெண்களுக்குத் திருமணம் செய்து வைக்காமல் காலங்கடத்தும் பெற்றோர்களை எச்சரித்து அவர்களின் பிரச்சனையை அறிந்து தீர்த்து வைக்க ஆவனவெல்லாம் செய்ய வேண்டும். இப்படி ஏதாவது செய்ய வேண்டுமா? வேண்டாமா? என்பது பற்றி வாசக நேயர்கள் சிந்திப்பார்களாக. எது எதற்கோ புதிய இயக்கமெல்லாம் நடத்தும் சீர்திருத்தவாதிகள் இந்தப்பிரச்னையிலும் சிறிது கவனம் செலுத்தட்டும்!

★

# பிராணிகளின் திசை உணர்வு

ஆட்டுக்கிடைக் காவல் நாய் 'ஸப்லா' வைப்பற்றி ஜியார்ஜியாவில் அநேகருக்குத் தெரியும். (டி)பிலிஸி நகரத்தில் வாழ்ந்துவந்த ஸாண்ட்ரோ எனும் சிறுவன் இந்த நாயை வளர்த்து வந்தான். அவனது தந்தை மலைமேல் இருந்த கூட்டுப் பண்ணையிலே பணியாற்றி வந்தார். ஸாண்ட்ரோவும் நாயும், உயிர்த் தோழர்களாய் வாழ்ந்து வந்தனர்.

கூட்டுப் பண்ணையின் ஆட்டுக்கிடையைக் காவல் காக்க ஸப்லாவை அனுப்ப வேண்டும் என்று உத்திரவு போடப்பட்டது. ஆட்டுக்கிடைக் காவலர்களின் தலைவனே நேரில்வந்து, ஸப்லாவைப் பிரித்து, மூடியிட்ட லாரியிலே அடைத்து மலைக்கு எடுத்துச் சென்றார். கிடையை அடைந்தவுடன் ஸப்லா சங்கிலியை அறுத்துக்கொண்டு (டி)பிலிஸியை நோக்கி ஓடத் தொடங்கியது. ஸப்லாவிற்கும் அதன் அருமை நண்பன் ஸாண்ட்ரோவிற்கும் இடையே பல மலைகளும், பள்ளத்தாக்குகளும், கரைபுரண்டோடும் காட்டாறுகளும் இருந்தன. வழியிலிருந்த கிராமத்து நாய்கள் வேறு ஒன்று சேர்ந்துகொண்டு அந்தப் புது நாயை விரட்டி அடித்தன.

இத்தனை தடைகளையும் தாண்டிக்கொண்டு, இரண்டு நாட்களுக்குப்பின், களைத்துச், சோர்ந்து, பல காயங்களுடன் ஸப்லா தன் பழைய வீட்டு வாசலிலே வந்து விழுந்தது.

இந்தப்பயணத்தைச் செய்வதற்கு ஸப்லா எடுத்துக்கொண்ட நேரத்தைக் கொண்டு பார்க்கும்போது, அது நேரான திசையில், குறுக்கு வழியாக, மலையிலிருந்து (டி)பிலிசியை வந்து அடைந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. இது எப்படி சாத்தியமாயிற்று? மலைக்கும் நகரத்திற்கும் இடையே ஆயிரம் பாதைகள். அவற்றில் சரியான பாதையை ஸப்லா எப்படித் தேர்ந்தெடுத்தது? ஸப்லா சென்றதோ, மூடிய வண்டியில். ஆகவே அது போகும் போது பாதையைப் பார்த்திருக்க முடியாது.

மலைக்கு போகும்போது 'ஸப்லா' நடந்து செல்லவில்லை. எனவே, கேள்வி, முகர்வு, சுவை, தொடு உணர்ச்சிகள் மூலமும் பாதையைக் கண்டுபிடித்திருக்கமுடியாது. வீட்டுப் பிராணிகள் போக வேண்டிய, சரியான திசையை எப்படி உணர்கின்றன? பல நூற்றுண்டுகளாக மனிதன் இதைப்பற்றிச் சிந்தித்துள்ளான். இக்கேள்விக்கு முடிவான, தெளிவான விடையை பிராணிகளே கொடுத்துள்ளன.

புகழ்பெற்ற சோவியத் வாழ்வியலாளர், பெரிடாஷ்விலி இந்தக் கேள்விக்கு விடைகண்டுபிடித்துள்ளார். அவர் பூனைகளை வைத்துக்கொண்டு சில சோதனைகளைச் செய்தார். ஆய்வுக்கூடத்தின் ஒரு மூலையிலே ஒரு கூண்டு உள்ளது. நேர் எதிர் மூலையில் உணவுத் தட்டுவைக்கப்பட்டிருந்தது. கூண்டிற்கும் தட்டிற்கும் இடையே பல தடுப்புக்கள் வைக்கப்பட்டுள்ளன. கூண்டினுள்ளே லையோவா எனும் பூனை இருக்கிறது. ஒளி உட்புகாத கருப்புத் துணியால் அதன் கண்கள் கட்டப்பட்டுள்ளன. கூண்டின் கதவு திறக்கிறது. பூனை கீழே இறங்கி வருகிறது. முன்னங்கால்களை நீட்டுகிறது. அசைகிறது. பின்னர் நேராகச் சென்று உணவுத் தட்டை அடைகிறது.

பூனையின் கண்கள் கட்டப்பட்டிருப்பதால், அது வழியைப் பார்க்க முடியாது. எனினும், கூண்டைத் திறந்தவுடன், சுருக்கு வழியாகச் சென்று உணவுத் தட்டை அடைகிறது. அப்படிச் செல்லும் போது, இடையிலுள்ள தடைகளின் மேல் உரசாமல் அவற்றைச் சுற்றிக் கொண்டு செல்கிறது. இந்தச் சோதனையைச் செய்யுமுன் பூனைக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. முதலில் அதன் கண்களை மூடாமல், கூண்டிலிருந்து, உணவுத் தட்டிற்குச் செல்லப் பயிற்சி அளிக்கப்பட்டது. இந்தப் பயிற்சிக்குப் பின் கண்கள் கட்டப்பட்டிருந்த போதிலுங்கூட பூனை கூண்டிலிருந்து, தட்டிற்குச் செல்கிறது. பிராணிகளின் உள்ளத்தைப்பற்றி நாம் இதுவரை கொண்டிருந்த சில கருத்துக்களை இந்தச் சோதனை தகர்த்து விட்டது.

கண்களின் உதவியில்லாமல் பூனை அந்த வழியிலே செல்ல வேண்டுமென்றால், முதலில் அதன் உள்ளத்தில் தன் சுற்றுப்புறத்தைப் பற்றிய முழுமையான ஒரு உருவம் இருக்க வேண்டும். இரண்டாவதாக அது நடந்து செல்லும் போது அதன் உடலைப் பொருத்துச் சுற்றுபுறத்திலுள்ள பொருட்கள் எந்த இடத்திலே இருக்கின்றன என்பதைப்பற்றிய ஒரு உணர்வு இருக்கவேண்டும். சுருங்கச் சொன்னால், பூனை தான் ஸ்துலமாகக் காண்பதைக்கொண்டு மட்டுமல்ல, தன் கருத்தையுங்கொண்டு நடக்கவேண்டும்! அப்படியானால் பிராணிகளுக்குச் சிந்திக்கும் திறன் உண்டா? என்ன எதிர்பாராத புரட்சிகரமான முடிவு இது! ஆம்! இந்த நிகழ்ச்சியை ஒரு எளிய அடிப்படையான சிந்தனை என்றுதான் கூறவேண்டும்.

எனினும் நமது புதிரின் ஒரு பகுதிக்கே விடை கிடைத்துள்ளது. பிராணிகள் தங்கள் சுற்றுப்புறத்தின் உருவத்தைக்கொண்டு தங்களைத் திசைப்படுத்திக் கொள்ள முடியும் என்று இந்த சோதனை மூலந்தெரிகிறது. ஆனால், புலன் உறுப்புக்களின் உதவி இல்லாமலே தங்களைத் திசைப்படுத்திக் கொள்ளும் திறன் பிராணிகளுக்கு இருக்கிறதே, அது எப்படி? மனிதன், உயர் மிருகங்கள் இவற்றின் திசைப்படுத்து திறனுக்கு அடிப்படையான உள-வாழ்வியல் கிரியைசள் அனைத்தும் நமக்குத் தெரியும் என்ற ஒரு தவறான எண்ணம், இதுவரை நமக்கு இருந்துவந்தது. இது போன்ற தவறான எண்ணங்கள் தான் விஞ்ஞானத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்து வந்துள்ளன.

ஜில்டா என்னும் நாய் சோதனைசாலைக்குள் கொண்டுவரப்படுகிறது. இந்த நாய் இதற்கு முன் சோதனை சாலைக்குள் வந்ததே இல்லை. எனவே அங்குள்ள எந்தப் பொருளையும் நாய் பார்த்ததில்லை. அதன் கண் வெள்ளைத் துணியால் கட்டப்பட்டுள்ளது. அதை சிறிது நேரம் கூண்டிலே வைக்கிறார்கள். பின்னர் உதவியாளர் ஒருவர் நாயைக் கையிலே எடுத்துக்கொண்டு, சோதனை சாலையைச் சுற்றி வளைந்து வளைந்து சென்று கடைசியாக அதன் மூக்கை உணவுத் தட்டிற்கு அருகிலே கொண்டுவருகிறார். நாய் உணவைச் சாப்பிடுவதற்கு முன், அதை மீண்டும் கையிலே எடுத்துக்கொண்டு முன்போலவே வளைந்து வளைந்து சென்று கூண்டிலே நாயை விட்டுவிடுகிறார். நாய் நடந்து செல்லவில்லை. எனவே அதன் தசை உணர்ச்சி, தொடு உணர்ச்சி முதலியவை இனி வரப்போகும் சோதனையில் பயன்படமாட்டா.

ஒருவேளை உணவை மோப்பம்பிடித்துக்கொண்டு முகர்வு உணர்ச்சியின் மூலம் செல்ல முடியுமோ என்று எண்ணலாம். அதுவும் முடியாது ஏனெனில் நாய்கள், (பூனைகளுங்கூட) 15-20 செ. மீ. தூரத்திலுள்ள உணவைத்தான் மோப்ப சக்தி மூலம் கண்டுபிடிக்க முடியும். மேலும் சோதனை சாலையின் தரையை 'பென்ஸின்' எனும் திரவத்தால் கழுவி வைத்தனர். எனவே மோப்ப உணர்ச்சியும் பயன்படாது. ஏனெனில் ஆராய்ச்சியாளர்கள் சோதனை சாலையின் மற்றொரு பகுதிக்குச் சென்றுவிட்டனர். சோதனை சாலையில் ஒரே நிசப்தம். கூண்டின் கதவு மெதுவாகத் திறக்கிறது. ஜில்டா கூண்டை விட்டு வெளியே வருகிறது. காலால் தரையைத் தட்டிவிட்டு, அது உணவுத் தட்டை நோக்கிச் செல்கிறது. ஆனால் அப்படிச் செல்லும்போது வளைந்து வளைந்து செல்வதில்லை! நேராக உணவுத் தட்டை நோக்கிச் செல்கிறது.

அன்று ஸப்லா எப்படி மலையிலிருந்து நேராக (டி)ஸிபிலி நகரத்திற்குச் சென்றதோ அதேபோல் கூண்டிலிருந்து நாய் உணவுத் தட்டிற்குச் செல்கிறது. அதே நிகழ்ச்சியின் சோதனைச் சாலை முறை இது! எந்தப் புலன்களின் உதவியுமின்றி நாய்கள் எப்படித் தங்கள் இடத்திற்குச் சென்றன? இது என்ன கண்கட்டு வித்தை? இதைவிட வியப்பான நிகழ்ச்சி சில நாட்களுக்குப் பின் நடந்தது.

சில நாட்களுக்குப் பின் இதே சோதனையைத் திரும்பச் செய்தனர். ஜில்டா கூண்டைவிட்டு இறங்கியது. ஆனால் தட்டை நோக்கிச் செல்லவில்லை. சோதனை சாலையில் சுற்றிச் சுற்றி வந்தது. சுவர் மேலும், கூண்டின் மேலும், மேஜை மேலும் முட்டிக்கொண்டது. ஊளையிட்டது. கண் கட்டை அவிழ்த்துவிட முயற்சித்தது. ஏன் இந்த மாறுதல்? ஜில்டாவிற்கு என்ன ஏற்பட்டுவிட்டது? ஒரு இரண சிகிச்சை தான் இந்த மாறுதலுக்குக் காரணம். அதன் உடலிலே இருந்த திசைப்படுத்தும் அங்கம் இரண சிகிச்சை மூலம் அப்புறப்படுத்தப் பட்டுவிட்டது.

உயர் பிராணிகளின் காதின் உட்புறத்திலே, சுருள் போன்ற உட்செவிக் குழல் உள்ளது. உடலின் சம நிலையை உணரக்கூடிய அவயவம் இதுதான் என்று கருதப்பட்டு வந்தது. பெரிடாஷ்விலியின் சோதனை மூலம் இது நிரூபிக்கப்பட்டுவிட்டது. வேறு எந்த வகையான உணர்வுகளும் இல்லாதபோது இது தானே இயங்குகிறது. ஆனால் மற்ற சமயங்களில் இது பார்வை, கேள்வி, உணர்ச்சிகளுடன் இணைந்து இயங்கி, அவற்றிற்கு உதவியாக இருக்கிறது. செவிட்டு ஊமைக் குழந்தைகளுக்கு இயங்கக்கூடிய உட்செவி உறுப்புக்கள் கிடையாது. எனவே அவை பார்வை உணர்ச்சி மூலமே தங்களைத் திசைப் படுத்திக்கொள்ள முடியும். ஆனால் குருடர்களுக்கு இந்த அவயவம் நன்கு வளர்ச்சி அடைந்திருக்கிறது. இவ்விதம் வெளி உணர்வு அவயவம் எது என்பது நமக்குத் தெரிந்துவிட்டது. இது பெரும் சாதனையாகும். விண்வெளிப் பயணிகளுக்குப் பயிற்சி அளிக்க இது பெரிதும் பயன்படும்.

மேற்கண்ட சோதனைகள் எல்லாம் ஆய்வுக் கூடத்திற்குள்தான் செய்யப்பட்டன. ஆனால் (ஸப்லா போன்ற) பிராணிகள் இதுபோல் 100-1000 கி. மீட்டர் தூரங்கள் செல்கின்றன என்று பல சந்தர்ப்பங்களில் கண்டுள்ளோம். அந்தப் பிராணிகளிற்கூட செயலின் அடிப்படை, சோதனை சாலைகளில் கண்டுபிடிக்கப்பட்டதைப் போன்றே இருக்கவேண்டும். ஆனால் அந்தச் செயலுக்குக் காரணமான தூண்டு உணர்ச்சி வேறுபடுகிறது. சோதனை சாலையில் பிராணிகள், உணவால் உந்தப்பட்டுக் கூண்டிலிருந்து தட்டிற்கு வருகின்றன. ஆனால் ஸப்லாவை (டி)பிலிஸிக்கு இழுத்துவந்த சக்தி முற்றிலும் மாறுபட்ட மற்றோர் சக்தி! இதுவே இரண்டிற்குமுள்ள பேதம்.

★

## ஆண்களைவிட பெண்கள் அதிகம்

ரஷ்யாவில் ஆண்களைவிட பெண்களின் எண்ணிக்கை அதிகம் என்று இவ்வாண்டு ஜனவரி 1-ந் தேதி தயாரிக்கப்பட்ட ஜன கணிதியிலிருந்து தெரிய வருகிறது.

மொத்த ஜனத் தொகையில் 54·4 சதவிகிதத்தினர் பெண்கள். அதாவது 12,46,00,000.

டாக்டர்களில் 75 சதவிகிதத்தினரும், பொருளாதார நிபுணர்களில் 58 சதவிகிதத்தினரும் பெண்களே.

# ரொடீஷியாவின் அரசியல் நிலை

– ஏ. ஆர். ராஜாமணி

பிரிட்டனின் காமன்வெல்த் உறவு இலாகா மந்திரி ஸ்ரீ பாட்டம்லே, நிதி மந்திரி கார்டினர் ஆகிய இருவரும் நேரில் நிலைமையைக் கண்டறிவதற்காக, இப்போது தெற்கு ரொடீஷியாவுக்குச் சென்றிருக்கிருர்கள். அவர்கள் அங்கு அரசாங்கத்துடன் பேச்சு நடத்துவார்கள். தெற்கு ரொடீஷிய பிரச்னைக்கு திருப்தியான தீர்வு ஒன்று காண்பதற்காக, அந்நாட்டின் பொதுமக்கள் கருத்தை ஆராய்வதே ஸ்ரீ பாட்டம்லே தூதுகோஷ்டியின் முக்கிய நோக்கமாகும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்கனவே நன்கு தெளிவு படுத்தியிருக்கிறது.

ஆனல், துரதிர்ஷ்டவசமாக, ரொடீஷிய அரசாங்கம் இந்த நல்லெண்ணத் தூதுவர்களுக்கு அளித்த வரவேற்பு அவ்வளவு சுமுகமாக இல்லை என்று தெற்கு ரொடீஷியாவின் தலைநகர் சாலிஸ்பரி செய்திகள் கூறுகின்றன.

ஸ்ரீ பாட்டம்லேயும்—நிதி மந்திரி கார்டினரும் ஸ்ரீ ஜோஷுவா என்கோமா என்கிற உயர் தலைவரை ஏற்கனவே சந்தித்துப் பேசியிருக்கிருர்கள். ஆயினும் ஆப்பிரிக்க மக்களின் மற்ருெரு பெருந் தலைவரான புனிதர் சிதாலோவுடன் அவர்கள் பேச்சு நடத்த மாட்டார்கள் என்று தெரிகிறது.

பிரதமமந்திரி ஸ்ரீ இயான்ஸ்மித், துணைப் பிரதம மந்திரி ஸ்ரீ கிளிப்போர்டு பாண்ட் போன்ற ரொடீஷிய முன்னணித் தலைவர்கள், ஒருதரப்பாய் சுதந்திரம் அறிவிப்பதையே விரும்புகிருர்கள். ரொடீஷிய பாராளுமன்றம் குறிப்பிட்ட காலத்திற்கு ஒரு வாரத்திற்கு முன்னரே கூடியிருக்கிறது. ஒருதரப்பாய் சுதந்திரத்தை அறிவிப்பதை சட்டபூர்வமாக்குவதற்கான சட்டம் பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்து வருவதாய் பார்வையாளர்கள் கூறுகிருர்கள்.

ஜுன் மாதம் நடைபெறவிருக்கும் காமன்வெல்த் பிரதம மந்திரிகள் மகாநாட்டுக்கு மூன்னர், தானே சுதந்திரத்தை அறிவிப்பது பற்றித் தமது நாடு ஆராய்ந்து வருவதாக லண்டனிலிருக்கும் ரொடீஷியத் தூதர் கூறியிருக்கிருர்.

ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் கருத்துக்கு; ஏன், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கருத்துக்குக்கூட, இது போன்ற ஒரு செயல் ரொடீஷிய அரசியல் சாஸனத்தை மீளுஞ் செயலாகவே படும். ஸ்ரீ இயான்ஸ்மித் தன்னுடைய முயற்சியில் வெற்றி பெறுவாரானல், வோட்டுரிமையை மதியாது ஆப்பிரிக்காவின் இந்தப் பகுதியில் நிரந்தரமான அடிப்படையில் வெள்ளையர் ஆதிக்கத்திற்கு வழி வகுக்கும் சட்டமொன்று அந்தகாரமான அரசியல் சூழ்நிலையின் துணையுடன் இயற்றப்பட்டதாகவே கொள்ளப்படும்!

ஜனநாயக நெறிகள் அனைத்திற்கும், ஐ. நா. வின் விருப்பத்திற்கும் ஸ்ரீ ஸ்மித்தின் இனப்பற்று மிகுந்த செயல் முறைகள் மாருனவை என்பதோடு, மனித குலத்தின் ஒட்டு மொத்தமான நேயத்திற்கும் ஊறு விளைவிப்பவையாகும்.

தெற்கு ரொடீஷியாவிற்குத் தெற்கே தென்னுப்பிரிக்கா இருக்கிறது. கிழக்கு–வடகிழக்குப் பகுதியில் போர்த்துகீசிய காலனி மொஸாம்பிக் உள்ளது. மொஸாம்பிக்கிலும், அதைச் சுற்றியுள்ள நாடுகளிலும் ஜனநாயகத்தை நசுக்க முழு அக்கறைகொண்டுள்ள போர்த்துகலும், தென்னுப்பிரிக்காவும் தெற்கு ரொடீஷியாவைத் தங்கள் போக்குக்குக் கொண்டு சென்றுவிடக்கூடும் என்று அஞ்சுவதற்கும் இடமிருக்கிறது. ஸ்ரீ ஸ்மித் தன்னுடைய ஆதரவை போர்த்துகலுக்கு தெரிவித்துள்ள நிகழ்ச்சி நினைவு படுத்தப்படுகிறது.

ஆப்பிரிக்காவில் வீசும் ஜனநாயக மலர்ச்சிக் காற்று தெற்கு ரொடீஷியாவில் வீசும்படி விட்டுவிடக் கூடாது என்பதை இந்த இருநாடுகளும் ஸ்ரீ இயான்ஸ்மித்தை தங்களுடைய ஆதிக்க—இனவெறி மிகுந்த தகிடுதத்தக் கொள்கைகளின் மூலம் நம்பச் செய்துவிட்டன.

ஆனல், தெற்கு ரொடீஷியாவின் நாற்பது லட்சம் ஆப்பிரிக்க மக்கள் ஸ்ரீ ஸ்மித்தின் கொள்கையை ஏற்றுக்கொள்ளவில்லை. இரண்டரை லட்சம் ஐரோப்பியர்கள், தமது அரசியல் ஸ்திதியை நிர்ணயிப்பதை ரொடீஷிய மக்கள் ஏற்கமாட்டார்கள் என்பது தெளிவு. இந்த நாட்டில் திருப்தியான பிரதிநிதித்துவ ஆட்சி இருந்தால்தான் விடுதலை வழங்கப்படும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கூறுகிறது.

இந்த நிபந்தனை புளித்துப்போனது; ஏகாதிபத்யவாதிகளின் பிரித்தாளும் சூழ்ச்சிக்குக் கருவியாக விளங்குவது என்றெல்லாம் ஆப்பிரிக்கத் தலைவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தைச் சாடுகிருர்கள். இந்த நிலையில், ரொடீஷிய–ஆப்பிரிக்கத் தேசியக்கட்சித் தலைவர்கள் சிலர் ஸ்ரீ பாட்டம்லேவுடன் சம்பாஷனை நடத்துவதற்காக சாலிஸ்பரி வந்திருக்கிருர்கள். ஸ்ரீ லியோபோல்ட்டகாவீரா தலைமையிலான Zanu தலைவர்கள் ஸ்ரீ இயான்ஸ்மித்தின் 'நாகரீகமற்ற அரசியல் சட்டங்கள்' குறித்து விரிவாக பாட்டம்லே தூதுகோஷ்டியிடம் விளக்குவார்கள் என்று தெரிகிறது.

(Zanu) இந்த யூனியனின் செயல் முறைகளைக் கண்டித்ததோடு, அதற்கு கடந்த ஆகஸ்டில் தடையும் விதித்து விட்டது ஸ்ரீ ஸ்மித்தின் அரசாங்கம். எனவே, சட்டப்படி ரொடீஷிய மக்களின் பிரதிநிதிகள் என்கிற வகையில் பிரிட்டிஷ் தூதுகோஷ்டியுடன் நாட்டின் நிலைமையை விளக்குவதற்கு அதன் தலைவர்கள் பெரும்பாடுபட வேண்டியிருக்கிறது.

இந்த வகையில் நேர்ந்த ஒருசம்பவம்தான், பிரிட்டிஷ் மந்திரிகள், புனிதர் சிதாலோவைச் சந்திக்க அனுமதி மறுக்கப்பட்டிருப்பதும்! அவர் நாட்டின் பாதுகாப்பு விதிகளின்படி சிறை வைக்கப்பட்டிருக்கிருர்.

பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு ஸ்ரீ இயான்ஸ்மித் ஏற்கனவே தன்னுடைய கொள்கையைத் தெளிவு படுத்தி விட்டிருப்பதாகத் தெரிகிறது. ரொடீஷியப் பிரச்னைகளை ஆராயவரும் ஸ்ரீ பாட்டம்லே, சிறை வைக்கப்பட்டுள்ளவர்களைச் சந்தித்து கருத்தறிவதை அனுமதிக்க முடியாது. வெளியிலுள்ள பிற கட்சியாளர்களை இந்தக் குழு அணுகுவதில் ஆட்சேபணையில்லை என்பதே ஸ்ரீ ஸ்மித்தின் கோட்பாடாகும்! அரசாங்கத்தின் தார்மீகமற்ற கொள்கைகளை எதிர்த்தவர்கள் அனைவரும் கைதிகளாக வைக்கப்பட்டிருக்கும் ஒரு நிலையில், நியாயமான கருத்துக்களைச் சேகரிப்பது எப்படி என்பது ஸ்ரீ பாட்டம்லேயின் கேள்வி! பிரிட்டிஷ் ரொடீஷிய — அரசாங்கங்களும், ஆப்பிரிக்கத் தேசீய வாதிகளும் ஒன்றிணைந்து ரொடீஷியப் பிரச்னைக்கு சமாதான முறையில் தக்கதொரு தீர்வு கண்டாலொழிய, அந்த நாட்டின் அரசியல் குழப்பம் தெளிவதற்கு வகையில்லை என்பது ஸ்ரீ பாட்டம்லேயின் கருத்து. ஆனல், அத்தகைய ஒரு வஞ்சகமான ஒரு சூழ்நிலை என்று – எப்படி உருவாகும் என்பதும் விளங்கவில்லை என்கிருர் ஸ்ரீ பாட்டம்லே!

உலக நேயத்திலும்-சமாதானத்திலும் நம்பிக்கை வைத்துள்ள ஆசிய–ஆப்பிரிக்க மக்கள், இத்தகையதொரு இக்கட்டான கட்டத்தில், ஸ்ரீ பாட்டம்லே பயணத்தின் விளைவுகளை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதில் வியப்பேதுமில்லை!

## அதிவெப்பம் தாங்கக் கூடிய உடைகள்!

★

எஃகுத் தொழிற்சாலையில் உலைக் களத்திற்கு அருகில் நின்று பணியாற்றும் தொழிலாளர்கள் அணிந்துகொள்வதற்காக சுமார் 1600 டிகிரி சென்டிகிரேட் வெப்பம் தாங்கக் கூடிய உடைகளை ஒரு பிரிட்டிஷ் நிறுவனம் சென்ற ஆண்டில் தயாரித்தது. இவற்றின் தரத்தை நிர்ணயிப்பதற்காக பிரிட்டனில் நடத்திய சோதனைகளில் இருந்து இவை சிறந்தவை என்று ருசுவாயிற்று; ஒரு தொழிலாளி இந்த உடையை அணிந்திருந்ததால், உருகியோடும் உலோகம் தெறித்தபோது உயிர் தப்பித்தான் என்று தெரிகிறது.

## உங்கள் குழந்தைக்கு நோய் வராமல் தடுக்க

★

வருமுன் காப்போனே புத்திசாலி என்று கூறுவதுண்டு. இந்தப் பொன்மொழி, நோய் வராமல் காத்துக் கொள்பவர்களுக்குச் சாலப் பொருந்தும். குழந்தைகளைச் சரிவர கவனித்து, தகுந்த பாதுகாப்பு அளித்து வந்தால், அவர்களைப் பல நோய்களிலிருந்து காப்பாற்றிவிட முடியும். டிப்தீரியா (தொண்டை அடைப்பான்) இருமல், தனுர் வாயு, இளம்பிள்ளை வாதம், வைசூரி, க்ஷயரோகம், டைபாய்டு, காலரா முதலிய நோய்கள் வராமல் தடுப்பதற்கான பயனுள்ள பாதுகாப்பு நடவடிக்கைகள் பல இருக்கின்றன.

ஆரம்ப முதலே குழந்தைகளுக்கு நோய் தடுப்பு முயற்சிகள் செய்யப்பட வேண்டும். குழந்தைகளின் ஆரோக்கியமான வளர்ச்சிக்கும், அவர்களை நோய் அணுகாமல் தடுப்பதற்கும், அவ்வப்போது நோய் தடுப்பு நடவடிக்கைகள் செய்யப்பட வேண்டும். அரசாங்க மருந்தகங்களிலாவது, முனிசிபல் மருந்தகங்களிலாவது இதற்கான வசதிகளைப் பெற்றுக்கொள்ளலாம்.

இவையன்றி, குடும்பக் கட்டுப்பாடு மருத்துவ நிலையங்களிலும் நோய் தடுப்பு ஊசி போட்டுக் கொள்ளலாம். ஒவ்வொரு குழந்தைக்கும் பிரத்தியேக கால அட்டவணையொன்றை மருத்துவ நிலையம் தயாரித்துக் கொடுக்கும். அதில் குறிப்பிட்டுள்ள காலங்களில் குழந்தைகளுக்குத் தடுப்பு ஊசி போடவேண்டும். குழந்தை பிறந்ததிலிருந்து அதன் 14–வது வயதுவரை ஒரு பொது கால – அட்டவணை ஒன்றின்படி நோய் தடுப்பு ஊசிகள் போட்டு வரலாம்.

குழந்தை பிறந்த முதல் நான்கு வாரங்களுக்குள் க்ஷயரோகத் தடுப்பு ஊசி போடவேண்டும். பின்னர் மூன்ரும் மாதத்திலிருந்து ஒன்பதாம் மாதம் வரை, வைசூரி தடுப்பு ஊசியும் டிப்தீரியா, இருமல், தனுர் வாயு ஆகிய நோய்களுக்கான தடுப்பு ஊசியும் மாதத்துக்கொரு முறை இரண்டு 'டோஸ்'கள் வீதம் குழந்தைக்குப் போட வேண்டும்.

ஏழாம் மாதத்திலிருந்து பத்தாவது மாதம் வரையில் இளம்பிள்ளை வாதத் தடுப்பு ஊசி, மாதத்துக்கொரு முறை இரண்டு "டோஸ்"கள் வீதம், போடவேண்டும். பின்னர் குழந்தையின் 15–வது மாதம் முதல் 18–வது மாதம் வரையுள்ள காலத்தில், டிப்தீரியா, இருமல், தனுர்வாயு ஆகிய நோய்களுக்கான தடுப்பு ஊசியை மீண்டும் போட வேண்டும். இளம்பிள்ளை வாதத் தடுப்பு ஊசியும் மூன்ருவது தடவையாகப் போட வேண்டும்.

குழந்தைக்கு இரண்டு வயதான பின்னர், நாலாம் வயதுக்கு முன்பு இளம்பிள்ளை வாதத் தடுப்பு ஊசி நான்காவது முறையாகப் போடவேண்டும். குழந்தை பள்ளிக்குச் செல்ல ஆரம்பித்த உடன், டிப்தீரியா இருமல், தனுர்வாயு நோய்களுக்கான தடுப்பு ஊசி கடைசி தடவையாகப் போட வேண்டும். அத்துடன், மாதத்துக்கு ஒருமுறை இரண்டு 'டோஸ்'கள் வீதம் 'டைபாய்டு' ஊசியும் போட வேண்டும். பத்து வயது முதல் 14 வயது வரையிலுள்ள காலத்தில், பி.சி.ஜி. ஊசி, வைசூரி தடுப்பு ஊசி, ஆகியவற்றைப் போட வேண்டும். வைசூரி தடுப்பு ஊசியை மூன்று வருடங்களுக்கு ஒருமுறை போட்டு வரவேண்டும்.

காலரா சாதாரணமாக ஏற்படும் காலத்திற்கு முன்பே காலரா தடுப்பு ஊசி போட்டுவிட வேண்டும். ஆனல் ஒவ்வொரு ஆண்டிலும் டைபாய்டு தடுப்பு ஊசி போடவேண்டும்.

பிரிட்டனில்

# தொழிற் கட்சி நிர்வாகம்

பிரிட்டனில் தொழிற் கட்சி, ஆட்சி பீடத்தில் அமர்ந்த சிறிது காலத்திற்குப் பின்னர், லெய்டன் தொகுதியில் நடந்த உப தேர்தலில், இக்கட்சியின் விசேஷப் பிரதிநிதி ஒருவர் தோல்வியுற்ற சம்பவம் பெரிய அதிர்ச்சியை விளைவித்துள்ளது. தோல்வியுற்ற பிரமுகர் பாட்ரிக் கார்டன் வாக்கர் என்பவர் அரசாட்சியில் அந்நிய இலாகா காரியதரிசி பதவியை வகித்தவர், தோல்வியுற்றதன் விளைவு, இவர் பதவியை விட்டகல நேரிட்டுவிட்டது. மேலும், இவர் அகன்றதனால் ஆளும் கட்சியின் உறுப்பினர்கள் எதிர்க்கட்சியின் உறுப்பினர்களைக் காட்டிலும் மூவரே அதிகமாக உள்ளனர். இவ்விதமாகக் குறைந்த பலத்தைக் கொண்ட ஓர் கட்சி எவ்வளவு நாட்கள் வரை நிர்வாகத்தில் இருக்க இயலும் என்பது பொதுமக்களிடையே எழும் ஓர் பெருத்த வினா.

தொழிற் கட்சிக்கு ஏற்பட்ட இப்பெருத்த தோல்விக்குக் காரணம், இதற்கு முன்பு அரசாட்சியை வகித்த கன்ஸர்வேடிவ் கட்சியின் சில திறமையற்ற செயல்களினால் விளைந்த சூழ்நிலையின் பயன் என்று கருதப்படுகின்றது. உதாரணமாக, தொழிற் கட்சி, நிர்வாகப் பொறுப்பை ஏற்ற சில வாரங்களுக்குள், பிரிட்டனில் பெருத்த பொருளாதார நெருக்கடி ஏற்பட்டு, 3000 மில்லியன் டாலர்கள், அந்நிய நாடுகளிலிருந்து கடன் உதவி பெற்று, நிலையைச் சமாளிக்க வேண்டிய ஒரு பொறுப்பு ஏற்பட்டுவிட்டது. பத்து ஆண்டுகளாகவே நாட்டில், பொருளாதாரக் குறைவினால் ஏற்பட்ட நோய்க்கு முந்திய அரசாங்கம் தீர்வு காணாமல் விட்டுவிட்டதன் காரணத்தினால் இத்தகைய நெருக்கடி திடீரென்று தலை தூக்கியது என்று கருதப்படுகிறது. இந்நோயின் விளைவால் ஏற்றுமதி குறைவுபட்டுள்ளது. பொருளீடு செய்வதற்கு வேண்டிய மூலதனக் குறைவினால், தொழில் துறையில் அபிவிருத்தி குன்றிவிட்டது; சமுதாய முன்னேற்றத்திற்கோ அல்லது கல்வித் துறையில் அபிவிருத்திக்கோ இது முட்டுக்கட்டையாகவும் விளங்கியுள்ளது. இத்தகைய நிலை ஏற்பட்டதற்கு பல காரணங்கள் கூறப்பட்டுள்ளன. ஆயினும் இந்நோய் ஆண்டுதோறும் தலைதூக்கி நிர்வாகத்தை வருத்துவது ஓர் சகஜமான நிகழ்ச்சி என்றிருந்தபோதிலும், கடந்த ஆண்டு, இது நிர்வாகத்தை மிகக் கடுமையாகப் பாதித்துள்ளது இதனால் தொழிற் கட்சி நிர்வாகப் பொறுப்பை ஏற்ற அடுத்த கணமே பெருத்த பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க வேண்டிய சூழ்நிலையைத் தவிர பல காலமாகவே பொருளாதார நோயினால் இடற்படும் நிலைக்கும் தீர்வு காணும்படியான ஒரு நெருக்கடியை நோக்கி நின்றது.

பதவி ஏற்றதும், தொழிற் கட்சியின் கவனம், இந்நோய்க்குத் தீர்வு காண்பதில் செலுத்தப்பட்டது. ஜார்ஜ் பிரௌன் என்பவரின் கீழ் ஓர் புதிய அமைச்சரகம் நிறுவப்பட்டு நாட்டுப் பொருளாதார நிலையைச் சீர்படுத்த இவ்வமைச்சரகம் ஏவப்பட்டது. இத்துறையில், இவ்வமைச்சரகம் மிகத் திறமையாக செயல்படுகின்றது என்றும் தெரிய வருகிறது.

தொழிற்கட்சி பொதுத் தேர்தலுக்கு முன்பு வெளியிட்ட பல இலட்சியங்களுள் குறிப்பிடத்தக்கவைகள், 1. நாட்டுத் தொழிற் உற்பத்தி அபிவிருத்தியை 4 சதவிகிதம் அதிகட்படுத்துதல், 2. முதியோர்களின் உபகாரச் சம்பளத்தை உயர்த்துதல் முதலியன. ஆனால், பதவி ஏற்றதும், பொருளாதார நெருக்கடியின் காரணத்தால் தொழிற்கட்சி நிர்வாகம் இவ்விரு இலட்சியங்களையும் நிறைவேற்ற வாய்ப்புக் கிட்டவில்லை. இதனால் வெகுண்ட முதியோர்கள், லெய்டன் பொதுத்தேர்தலில் இக்கட்சியின் அபேட்சகருக்கு வாக்களிக்க முன்வரவில்லையென்றும், வாக்காளர் பட்டியலில் இவர்களுடைய எண்ணிக்கை 25 சதவிகிதம் ஆனபடியால் தொழிற்கட்சி தோல்வியடைந்ததில் ஆச்சர்யமொன்றுமில்லை என்றும் சொல்லப்படுகிறது. இத்தகைய பெருத்த கஷ்டமான சூழ்நிலையில் இடற்பட்டு வரும் தொழிற்கட்சி நிர்வாகம் பொதுமக்களின் அபிமானத்தை இழக்கவும் நேரிட்டு விட்டது.

பொதுவாக, இத்தகைய சூழ்நிலைகளை நோக்கி நிற்கும் ஒரு நிர்வாகம் பொதுமக்களின் ஆதரவை நாட பிரசாரங்கள் செய்ய முன்வர வேண்டும். தொழிற் கட்சி நிர்வாகம் வானொலியையோ, அல்லது டெலிவிஷனையோ போதிய அளவு பயன்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். ஏனெனில், நாட்டுப்பத்திரிகைகள் பொதுவாக இக்கட்சிக்கு ஆதரவு காட்டுவதில்லை. பாராளுமன்றத்தில், அங்கத்தினர்களுக்கு நிர்வாகம் நோக்கி நிற்கும் கஷ்டங்களைப் பற்றி சொற்பொழிவுகளில் அமைச்சர்கள் அறிவித்து வந்தபோதிலும் பொதுமக்களுக்கு இவைகள் அறிவிக்கப்படவில்லை. இக்காரணங்களால், பொதுமக்களுக்கும் நிர்வாகத்திற்கும் இன்றியமையாத நல்லுறவு வளர்க்கப்படவில்லை.

தவிர தொழிற்கட்சி நிர்வாகம் செய்த பெரிய தப்பிதம், பாராளுமன்ற அங்கத்தினர்களின் ஊதியத்தை உயர்த்துவதாக வாக்களித்து விட்டு, அதை நிறைவேற்ற இயலாமல் போனது. மேற்கூறிய, இத்தகையத் தோல்விகள் நிர்வாகத்திற்கு இப்பொழுது படிப்பினையாகத் திகழ்கின்றன. தான் இடற்பட்டு வரும் சூழ்நிலையிலிருந்து வெளியேறுவதற்கு நிர்வாகம் பெருத்த அளவு போரிட்டுக் கொண்டு வந்தபோதிலும், பொருளாதாரத் துறையில் ஏற்பட்டுள்ள தேக்க நிலையிலிருந்து முன்னேறுவதற்கு வேண்டிய முயற்சிகளை காலதாமதமின்றி கையாள வேண்டும். இந்நிலை, கன்ஸர் வேடிவ் கட்சி தொழிற்கட்சிக்கு அளித்துள்ள பிதுரார்ஜிதம் என்று இருந்த போதிலும், வாக்காளர்கள் புது நிர்வாகத்தினால், மாறுதல்கள் ஏற்படும் என்று எதிர்பார்த்தார்கள். எதிர்பார்த்த அளவுக்குப் பயன் கிட்டாதது அவர்களுக்குப் பெருத்த ஏமாற்றத்தை விளைவித்துள்ளது. ஆளுங்கட்சி அங்கத்தினர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் 3 வித்தியாசத்தில் இயங்குகிறது அறிந்த விஷயம். ஒரு உப தேர்தலில் ஆளுங்கட்சி தோல்விபெற்றாலும் அல்லது ஒரு வாக்கெடுப்பில், பாராளுமன்றத்தில் இரண்டு ஆளுங்கட்சி அங்கத்தினர்கள் நோய்வாய்ப்பட்டு அதனால் வாக்களிக்க இயலாமல் போய்விட்டாலும், ஆளுங்கட்சி ஓர் சங்கட நிலையை நோக்கி நிற்கும். இக்காரணங்களால் பிரிட்டனில் பொதுமக்களிடையேயும் ஆளுங்கட்சியின் ஆதரவாளர்களிடையேயும் விரைவில் மற்றொரு பொதுத் தேர்தல் நடைபெற வேண்டும் என்ற கருத்து உலவி வருவதில் ஆச்சர்யமொன்றுமில்லை.

ஃ ஃ ஃ




# வீர ஜவானும் பிஞ்சு நெஞ்சமும்

இமயமலைப் பகுதிகளில் முன்னணிப் பகுதிகளுக்குச் செல்பவர்கள் ஒரு காட்சியைக் கவனியாமல் இருந்திருக்க மாட்டார்கள். ராணுவவண்டிகள் செல்லும் போது, சாலைக்குப் பக்கத்தில் விளையாடும் சிறுவர்கள் நிமிர்ந்து நின்று, மிடுக்காக 'சல்யூட்' அடித்து 'ஜெய் ஹிந்த்!' என்று கூறி மரியாதை செய்வதைப் பார்க்காமல் இருக்க முடியாது. ராணுவ வண்டியிலுள்ள ஜவான்களும் சிறுவர்களது மரியாதையை ஏற்றுக் கரகோஷம் செய்வார்கள். அந்தக் காட்சியைக் கண்டால் இதயம் நெகிழும்!

ஜவானையும், சிறுவர்களையும் இணைக்கும் அன்புப் பிணைப்பின் கதையை இந்த அருமைக்காட்சி கூறும். வீரனுக்குரிய நடையுடனும், மிடுக்கான உடையில், துப்பாக்கியோடு நிற்கும் ஜவான் இளம் நெஞ்சங்களுக்கு ஒரு வீரப் பெருமகனாகவே காட்சியளிக்கிறான், அவனைப்போல டக்டக் என்று நடந்தும், தோற்றமளித்தும், பல விதங்களிலும் அவனைப் போல நடந்துக் காட்ட சிறுவர்கள் முயல்வதைக் காண்கிறோம். அவனைப் போலவே சிறுவர்களும் மிடுக்காக 'சல்யூட்' அடிக்கின்றனர்.

ஜவான் இக்குழந்தைகளைக் காணும் பொழுதெல்லாம் தன்னுடைய செல்வங்களைப் பற்றிய நினைவு அவன் மனதில் எழும். குழந்தைகளின் பால்வடியும் முகங்களில் தவழும் சிரிப்பும் எவர் மனதையும் கவரக் கூடியவை. ஆயினும், பல மாதங்களாக தன்னுடைய சொந்தக் குழந்தைகளைக் காணாதவர்களுக்கு அவை பெரிதும் இதமளிக்கும். தன்னுடைய குழந்தைகளோடு கொஞ்சுவதாக எண்ணி, ஜவான் அவர்கள் மீது அன்பைப் பொழிவான்.

கடந்த இரண்டாண்டுகளில் ராணுவம் விரிவாகியுள்ளது. முன்னணிப் பகுதிகளுக்கு முன்னைவிட அதிகமாக ராணுவத்தினர் சென்று வந்துகொண்டிருக்கிறார்கள். இதன் காரணமாக, ஜவான்களுக்கும், முன்னணிப்பகுதிகளிலுள்ள குழந்தைகளுக்குமிடையே உள்ள நல்லுறவு மேலும் வளர்ந்துள்ளது. ராணுவத்தின் கட்டுப்பாடும் ஒழுக்கமும், குழந்தைகளின் மனதில் பசுமரத்தாணிபோல் பதிந்து விடுகின்றன. அசாதாரண விஷயங்களைப் பற்றி அறிவதில் குழந்தைகளுக்கு ஆர்வம் மிக அதிகம். எனவே, சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் அவர்கள் ஜவானுடன் பேசுகிறார்கள். பாலகருடன் சில நிமிடங்கள் பேசுவதற்கு ஜவானுக்கும் ஆவல் உண்டு.

ராணுவ முகாம்களுக்குப் பக்கத்தில் வசிக்கும் சிறுவர்கள் மற்ற நன்மைகளையும் பெறுகிறார்கள். ராணுவ டாக்டர், முடிந்தபோதெல்லாம் அவர்களுக்கு வைத்திய உதவி அளித்து வருகிறார். ராணுவத்தினரின் குழந்தைகள் படிக்கும் பள்ளிக்கூடங்களில் அக்கம் பக்கத்திலுள்ள குழந்தைகளும் சேர்ந்து படிக்கிறார்கள். ஏழைக் குழந்தைகளை ஜவான்களும் சுவீகாரம் எடுத்துக் கொண்டு அவர்கள் கல்வி கற்கப் பணமும் அளிக்கிறார்கள். நல்லெண்ணத்தில் செய்யப்படும் இக்காரியங்கள் ஜவான்களுக்கும் மக்களுக்குமிடையே நட்புறவை வலுப்படுத்துகின்றன.

ஜவான்களுக்கும் குழந்தைகளுக்குமிடையேயான இந்த நட்புறவு எதிர் காலத்தில் பெரும் நன்மை நல்கும். இன்றைய குழந்தைகள் நாளை இந்நாட்டு குடிமக்களாக வளர்ந்து சிறக்கும் போது ராணுவத்தைப் பற்றிப் பல விஷயங்களையும் அறிந்தவர்களாக இருப்பார்கள். அத்துடன் இந்திய ஜனநாயகத்தின் பாதுகாப்பு அமைப்பைப் பற்றியும் அவர்கள் அறிந்து கொள்வார்கள். அவர்களில் பலர் ராணுவத்தில் சேரலாம். ஆம், சிறு வயதில் விளையாட்டுக்காக நடித்து காட்டியவர்கள் பிற்காலத்தில் நாட்டைக்காக்கும் அஞ்சா நெஞ்சம் படைத்த வீரர்களாக விளங்கப் போகிறார்கள்.

✻



Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10. Single copy : Twelve Paise.